உ

ஓம்

ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தர்

இயற்றியருளிய

# தற்கால இந்தியா

(மொழிபெயர்ப்பு ஆசிரியரும், பிரசுரித்தவரும்)

ஸ்வதந்திராநந்தன்

(சுப்பிரமண்யசிவம்)

ஸ்ரீ பாரதாச்ரமம்,

இராயப்பேட்டை,

சென்னை.



இந்நூல் கிடைக்குமிடம்:—

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தகசாலை,

நெ. 4/43, நயினியப்ப நாயக்கன் வீதி,

பார்க் டவுன் (P. O.), சென்னை.

உ

ஓம்

ஸ்ரீராமகிருஷ்ணாயநமஃ

# முகவுரை



தேவராஜ ஸிம்ஹமாகிய ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகளைப்பற்றி அறியாத இந்தியர்—அதிலும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களுக்குள் — இல்லையென்றே சொல்லலாம். இவருடைய ஞான ஹிருதயத்திலே, யோக மனத்திலே, பக்தி பரவச சித்தத்திலே, (நிஷ்காம) கர்மநிலையிலே ஜீவ காருண்யம் என்னும் பேரூற்றுப் பொங்கித் ததும்பி, உலகு முழுதும் அமிருதமாய்ப் பெருகி, ஆயிரக் கணக்கான ஜீவ ராசிகளுக்குத் துக்க நிவிர்த்தி யுண்டுபண்ணிற்று என்பதில் சந்தேக மில்லை. அந்த ஜீவகாருண்யத்திலே பெரும் பகுதி இந்தியாவைக் கவர்ந்தது; பெரும் பான்மையோர் "அவருக்குத் தேசாபிமானம் மிகுதியா யிருந்தது" என்றும், "தேசபக்தி மேலீட்டினால் இந்தியாவுக்காக அவர் ாடுபட்டார்" என்றும் நினைத்துக்கொண் டிருக்கின்றனர். து தப்பு. "எந்தத் தேசமும் என்னைத் தனக்குச் சொந்த ானவனென்று கருதக்கூடாது; நான் உலகு முழுதுக்கும்

சொந்தமானவன்" என்று ஸ்வாமிகள் பன்முறை கூறியிருக்கிறார். "சத்தியமே எனது தெய்வம்; பிரபஞ்சமே எனது தேசம்." "என்மீது எந்தத் தேசத்துக்கும் பிரத்தியேக உரிமை யுண்டு?ஏதேனும் ஒரு ஜன சமூகத்துக்கு அடிமையா நான்?," "ஈச்வரனும் சத்தியமுமே உலகில் ராஜீய விஷயங்கள்; மற்றவை யெல்லாம் அற்பம்," என்று இவ்வாறெல்லாம் எழுதியிருக்கிறார் ஸ்வாமிகள். ஆகையால், "மாதாச: பார்வதிதேவி, பிதாச: பரமேஸ்வர:, பாந்தவா: சிவபக்தா:ச, ஸ்வதேசம் புவனத்திரயம்" என்றபடியே ஸ்வாமிகள் ஜகத் முழுவதையுமே தமக்கு ஸ்வதேசமாகக் கொண்டிருந்தார்; ஆனால், இந்தியாவைப் பற்றிய நினைப்பே அவருடைய மனத்தைச் சதா சர்வதா காலமும் கவர்ந்து கொண்டிருந்தது என்பதில் சந்தேக மில்லை. இந்தியா தாம் பிறந்த நாடு; ஆதலால், அதை உத்தாரணம் செய்யவேண்டும் என்ற குறுகிய நினைப்பு அவருக்கு இருந்ததில்லை. ஆனால், உலகிலுள்ள மற்றெல்லாத் தேசங்களிலும் இந்தியா உயர்ந்தது; தெய்வ புருஷர்கள் வாழ்ந்த நாடு; உத்தமமான ஆத்ம ஞானத்துக்கு உற்பத்தி ஸ்தானம்; உலகு முழுதுக்கும் அறிவு மட்டுமல்ல, அன்னமு மளித்து ஆதரித்த தேசம்; "இல்லை" என்று வந்த பேருக்கு "இல்லை" என்று சொல்லாது எடுத்தெடுத்துக் கொடுத்து இரங்கிய தேசம்; இத்தகைய பெருமை வாய்ந்த தேசத்தின் தற்கால நிலைமை எல்லோரும் வெளணம் செய்தற் கேற்றதா யிருக்கிறது. 'இந்தத் தேசத்து ஜனங்கள் இனிமேல் எழுந்திருக்க முடியாதோ?' என்று ஆன்றோர் பலரும் ஐயுறும்படியான நிலைமைக்கு வந்திருக்கின்

றனர்; புண்ணிய பூமியாம் இந்த ஆர்யாவர்த்தத்தை அந்த-காரம் சூழ்ந்திருக்கிறது. இந்தத் தேசம் எல்லா விஷயத்திலும் ஸ்வாதீன மிழந்து பராதீனமா யிருக்கிறது; தரித்திரம் என்னும் பேய் இந்தத் தேசத்திலே தலைவிரித் தாடுகின்றது; இந்தப் பயங்கரமான வறுமை இங்குப்போல வேறெந்தத் தேசத்திலு மில்லை; இவற்றை யெல்லாம் நினைத்து ஸ்வாமிகளுடைய மனம் உருகிற்றே யொழிய, இக்கால நாகரிகத்திலே ஒருகூட்டம் ஜனங்கள் தங்களுக்கு எல்லைகளை வரையறுத்துக்கொண்டு, பிறர் எக்கேடு கெட்டாலும் தாங்கள் மாத்திரம் சுகமே வாழவேண்டுமென்றுள்ள குறுகிய தேசாபிமான மென்னும் கொடிய ஸ்வயநலம் அவரிடத் திருந்ததே யில்லை. ஆகையால், "தற்கால இந்தியா" வானது அவரது மனத்திலே யெழுந்த அநேக புதிய எண்ணங்களுக்கும் ஆராய்ச்சிகளுக்கும் இடங் கிடைத்தது. அவர் இந்தியாவிலேயுள்ள ஏழ்மைத்தனத்தைக் கண்டு இரவு பகலாக அழுதிருக்கிறார்; "ஏழை பங்காள"னாகி இந்தியாவினிடத்து இரங்கினார்.

இந்தத் "தற்கால இந்தியா"விலே, அவர், நான்கு ஜாதிகளினுடைய போக்கையும் கதியையும் விஸ்தாரமாக எடுத்துக்காட்டிக், காலசக்கரச் சுழற்சியிலே பிராஹ்மணர்களுடையவும் க்ஷத்திரியர்களுடையவும் ஆதிக்கம் போய்விட்டதென்றும், வைசிய ஜாதி இப்பொழுது ஆதிக்கம் வகித்து வருகிறதென்றும், சீக்கிரத்திலே சூத்திரர்களு (தொழிலாளர்களு) டைய ஆதிக்கம் வரப்போகிறதென்றும்,வெகு அழகாக விளக்கி

யிருக்கிறார். இப் புத்தகத்தின் அருமையைப்பற்றி நான் சொல்வது மிகையாம். ஸ்வாமிகள் ஒரு அருமையான அவதார புருஷர். என்றும் வற்றாத, இன்பம் நிறைந்த அவரது ஹிருதயத்தினின்றும் அவருடைய கருத்துக்கள் பொங்கிப் பொங்கி வழிந்திருக்கின்றன. "தின்னத்தின்னத்தெவிட்டாதகரும்பாக" உள்ள அவருடைய எண்ணங்களில் சில இந்தத் "தற்கால இந்தியா"வில் வந்திருக்கின்றன. தற்கால இந்தியா இருக்கும் நிலைமையில் இந்தத் "தற்கால இந்தியா" எல்லோரிடத்தும் இருக்கவேண்டியதென்பதை நான் வற்புறுத்துகின்றேன். தற்கால இந்தியாவிடம் மகா சக்தி கிருபை செய்க.

சென்னை
இராயப்பேட்டை
8 - 4 - 22.

ஸ்வதந்திரானந்தன்,

(சுப்பிரமணிய சிவம்)

உ
ஓம்
ஸ்ரீராமகிருஷ்ணாயநம:

# ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தர்

அருளிச்செய்த

# நற்கால இந்தியா

வேத காலத்து வைதிகர்கள் தங்களுக்கிருந்த மிகுந்த பலத்துக்கு யக்ஞ மந்திரங்களின் அறிவையே ஆதாரமாகக் கொண்டிருக்கிறார்கள். இந்த மந்திரங்களின் சக்தியினால் தேவர்கள் தங்களுடைய திவ்ய வாசஸ்தலங்களிலிருந்தும் கீழே யிறங்கிவந்து, ஆகுதி செய்யப்பட்ட ஆகார பானாதிகளை ஏற்றுக்கொண்டு, எஜமானர்களுடைய பிரார்த்தனைகளை நிறைவேற்றும்படிச் செய்யப்படுகிறார்கள். அரசர்களும் அவர்களது குடிகளும் தங்களுடைய பூவுலக வாழ்க்கையில் தாங்கள் சுக வாழ்வு வாழும்பொருட்டு இந்த வைதீகர்களிடத்தில் வேண்டி நிற்கிறார்கள். ராஜஸோமமானது வைதீகனால் பூஜிக்கப்பட்டு, அவனுடைய மந்திரங்களின் சக்தியினால் செழிப்புறும்படிச் செய்யப்படுகிறது. ஆகையினால், வைதீகனால் ஆகுதியில் அளிக்கப்பட்ட ஸோமரசத்தைப் பிரியமான ஆகாரமாக உடைய தேவர்கள் அவனிடத்தில் எப்பொழும் அன்புடைய

வர்களாய் அவனால் விரும்பப்படும் வரங்களை யளிக்கின்றார்கள். இவ்விதமாகத் தேவ கிருபையினால் பலமடைந்தவனாகி, அவன் மனுஷ்ய சக்தி யெல்லாவற்றையும் எதிர்த்து நிற்கிறான்; ஏனெனில், தேவர்களுடைய சக்திக்கு விரோதமாக, மனிதர்களுடைய சக்தி என்ன செய்ய முடியும்? பூ சக்தி எல்லாவற்றுக்கும் மத்திய ஸ்தானமாயுள்ள அரசனும் அவனுடைய வீட்டு வாசலில் காத்து நிற்கிறான். அவனிடமிருந்து கிடைக்கின்ற அன்புடன் கூடிய கடாக்ஷம் ஒன்றே மிகமிகப் பெரிய உதவியாம்; அவனுடைய ஆசி வசனமே சமஸ்தானத்துக்குப் பெரிய காணிக்கையாம்;மற்றெல்லாவற்றினும் உயர்ந்ததாம். வைதிகன் மரணமும் அழிவும் பயக்கக்கூடிய விஷயங்களிலே பிரவேசிக்கும்படி அரசனை ஆக்ஞாபிக்கின்றான்; அன்பும் அறிவும் மிகுந்த புத்திமதிகள் சொல்லிக்கொண்டு அரசனுக்கு மிகமிக நெருங்கிய நண்பனாய் நிற்கின்றான். சாமர்த்தியமாக, சூட்சுமமான ராஜதந்திர வலையை வீசி, அரசனை அதில் சுலபமாக அகப்படுத்திவிடுகிறான்,—இவ்விதமாக அவன் ராஜசக்தியை அடியோடு தனக்கு அடங்கியிருக்கும்படி அடிக்கடி செய்துவிடுகிறான். எல்லாவற்றுக்கும் மேலாக, மிகமிகப் பெரிய பயம் யாதெனில், ராஜ வம்சத்தின் முன்னோர்களுடையவும்-அவனுடையவும்-அவனது குடும்பத்தினுடையவும் பெயரும் கீர்த்தியும் வைதிகனுடைய எழுதுகோலின் தயவை நாடியிருக்கின்றன. அவனே சரித்திராசிரியன். அரசன் சர்வாதிக்க சக்தியை உடைத்தாயிருக்கலாம்; தனது ராஜ்யபாரத்திலே பெருங்கீர்த்தியை அடையலாம்; குடிகளுக்குப் பிதாவுமாய் மாதாவுமா யிருக்கலாம்,—ஆனால், வைதிகன் திருப்தி செய்

யப்படாவிட்டால்—அவ்வரசனுடைய கீர்த்தி ஆதித்தன் அவனுடைய கடைசி மூச்சோடு என்றுமே அஸ்தமித்தவ னாய்விடுவான்; அமைதியான பனி, சமுத்திரத்தில் எப்படி விழுந்துவிடுகின்றதோ, அதுபோல, ஜகத் முழுதும் புகழப் படுதற்கு யோக்கியதையுள்ள அவனுடைய நன்மையும் உபகார மும் காலமாகிற பெரிய கருவுக்குள்ளே மறைந்துவிடுகின் றன. ஆனால், அநேக வருஷங்கள் நீடிக்கும்படியான பெரிய யாகங்கள் நடத்தியவர்கள், அசுவமேதம் முதலியவற்றைச் செய்தவர்கள்-மழைக்காலத்திலே இடைவிடாது பொழியும் மழையைப்போல, வைதீகர்களுக்கு எண்ணற்ற திரவியத்தை வாரி வாரிக் கொடுத்தவர்கள்-அவர்களுடைய பெயர்கள் வை தீகர்களுடைய கிருபையினால் சரித்திரத்தின் பக்கங்களில் பிரகாசப்படுத்தப் பட்டிருக்கின்றன. தேவர்களின் நேசனான ப்ரியதர்சி தர்மாஸோகனுடைய பெயர் வைதீகவுலகத்தில் ஒரு பெயரேயன்றி வேறொன்று மில்லை; ஆனால், பரீட்சித்தின் புத் திரனான ஜனமேஜயனுடைய பெயர் ஒவ்வொரு ஹிந்து குடும் பத்திலும் சாதாரண வார்த்தையா யிருக்கின்றது.

சமஸ்தானத்தைக் காப்பாற்றுவதற்காகவும், தன்னுடைய வும் தன்னுடையபெரிய பரிவாரத்தினுடையவும் சுகங்கட்கும் ஆடம்பரங்கட்கும் ஏற்படுகின்ற செலவுக்காகவும், சர்வ சக்தி வாய்ந்த வைதீகர்களைத் திருப்திசெய்து அவர்களுடைய பொக் கிஷங்களைநிரப்புவதற்காகவும், அரசன், சூரியன் பூமியினின் றும் ஈரத்தை எப்படி உறிஞ்சுகின்றதோ அதுபோல, இடைவி டாதுதனது குடிகளின் வளங்களை ஆகருஷித்துக்கொண் டிருக்

கின்றான். அவனுடைய முக்கியமான இரை—அவனுடைய கற வைப் பசுக்கள்-வைசியர்களேயாவர்.

ஹிந்து அரசர்களின் காலத்திலாகட்டும், பௌத்தர்க ளின் அரசாட்சியிலாகட்டும், சாதாரணக் குடிஜனங்கள் சமஸ்தான விஷயங்களிலே தங்கள் அபிப்பிராயத்தை யெடுத் துக் கூறிக் கலந்துகொண்டதாக நாம் காணவில்லை. யுதிஷ்டிரர் வாரணாவதத்தில் இருக்கிறபொழுது, வைசியர்களுடையவும் சூத்திரர்களுடையவும் வீடுகளுக்குச் செல்கின்றார், உண்மை தான். அயோத்திக்கு ஸ்ரீராமச்சந்திரனை அரசராக்க வேண்டு மென்று குடிஜனங்கள் பிரார்த்திக்கின்றார்கள், உண்மைதான்; அதுமாத்திரமல்ல. அவர்கள் சீதையினுடைய நடத்தையில் குற்றம் கண்டுபிடிக்கவும் செய்து அவளைத் தேசப்பிரஷ்டம் செய்யும்படிச் செய்ய ஆலோசனைகளும் இரகஸ்யமாகச் செய்து வந்திருக்கிறார்கள்; ஆனால், சமஸ்தானத்தில் சம்மதிக்கப்பட்ட ஒரு விதியாக அவர்களுக்கு அரசாங்கத்தில் நேர் வார்த்தை கிடையாது. ஜனங்களுடைய சக்தி மறைபாடான, ஒழுங்கற்ற வழிகளில், எந்த முறையு மின்றி, வெளிப்பட முயற்சிக்கின் றது. இந்த சக்தி தங்களுக்கு உண்டு என்று ஜனங்களுக்கு இன்னும் நன்றாகத் தெரியவில்லை. அதை ஒற்றுமையுடன் செய் கையில் கொண்டுவருதற்கு அவர்கள் முயற்சிப்பது மில்லை; அப்படிச் செய்வதற்கு அவர்களுக்குத் திடச்சித்தமும் இல்லை. சிறிய, வேறுவேறான சக்தி யம்சங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு, அதன் பயனாக அபரிமிதமான பலத்தை யுண்டுபண்ணக்கூடிய அந்தச் சக்தியும், அந்தச் சமர்த்தும் அவர்களிடம் அணுவள வும் இல்லை.

இதற்குத் தகுந்த நியதிகள் இல்லாக்குறை காரணமா? இல்லை, அது அன்று. அரசாங்கத்தின் வெவ்வேறு இலாகக்களை நடத்திக்கொண்டுபோதற்குத் தனித்தனியாகத், தெளிவாக முறைகளிருக்கின்றன; நியதிகள் இருக்கின்றன; கிஸ்தி வசூல் சைந்ய நிர்வாகம், நியாய பரிபாலனம், தண்டனைகளும் வெகுமதிகளும் இவை போன்ற ஒவ்வொன்றுக்கும் மிகமிக நுட்பமான விவரங்களுடன் விதிகள் இருக்கின்றன. ஆனால், எல்லாவற்றுக்கும் ஆதாரமாய் ரிஷியின் ஆக்ஞை—தெய்வ அதிகார வாக்கு, அருள் கொண்ட ரிஷியின் மூலமாக ஈச்வரப்பிரகாசம்—இருக்கின்றது. அவை மிகக் கண்டிப்பானவையென்று அநேகமாகச் சொல்லிவிடப்படக்கூடும். இத்தகைய சந்தர்ப்பங்களிலே, ஜனங்கள் தங்களுடைய பொது நன்மைக்காக ஏதேனும் ஒரு நோக்கத்தைப் பூர்த்தி செய்துகொள்ளும் பொருட்டு ஒன்று சேர்ந்து ஒற்றுமைப்படக் கற்றுக்கொள்ளக்கூடிய, அல்லது அரசனால் குடிகளிடமிருந்து வசூலிக்கப்பட்ட சொத்துக்களில் பொது ஜனங்களுக்கு உரிமையுண்டு என்ற எண்ணத்தையுண்டுபண்ணக்கூடிய ஒருமுகப்பட்ட புத்தியை உடைத்தாயிருக்கும்படியான எந்த விதக் கல்வியையும், அல்லது சமமான வருமானத்தையும் செலவையும் அடக்கியாளவல்ல பிரதிநிதித்துவ உரிமையை அடைவதற்கு உள்ள ஆசையை உண்டுபண்ணக்கூடிய கல்வியைக்கூட ஜனங்கள் அடைவது ஒருபொழுதும் சாத்தியமாயில்லை. அவர்கள் ஏன் அப்படிப்பட்ட விஷயங்களைச் செய்ய வேண்டும்? அவர்களுடைய செழிப்புக்கும் அபிவிருத்திக்கும் ரிஷியின் அருள் (வாக்கு) பொறுப்புடையதல்லவா?

இன்னும் அந்த விதிகளெல்லாம் புத்தகங்களிலிருக்கின்றன. புத்தகங்களில் குறிப்பிடப்பட்டுள்ள விதிகளுக்கும் அநுபவ வாழ்க்கையிலேயுள்ள அவற்றின் அநுஷ்டானத்துக்கும் இடையே, வித்தியாசம் ஓர் உலகளாவு இருக்கின்றது. ஆயிரக்கணக்கான அக்கினிவர்னர்கள் சென்ற பின்னரே, ஒரு ராமச்சந்திரன் பிறக்கின்றான். அநேக அரசர்கள் சந்தஸோகனுடைய வாழ்க்கையை நமக்கு நிரூபித்துக் காண்பிக்கின்றார்கள்; தர்மஸோகர்கள் அபூர்வமாயிருக்கிறார்கள். குடிகளுக்கு ஜீவனைப் போன்றிருக்கின்ற ஆக்பர் போன்ற அரசர்களின் தொகை, ஜனங்களின் ரத்தத்தின்மீது வாழ்கின்ற அவுரங்கஸீப்போன்ற அரசர்களின் தொகையைப்பார்க்கிலும் குறைந்ததே!

அரசர்கள் யுதிஷ்டிரன், ராமச்சந்திரன், தர்மஸோகன் அல்லது ஆக்பர் போன்று திவ்ய குணம் வாய்ந்து, அவர்களுடைய தர்மராஜாங்கத்திலே ஜனங்கள் ரக்ஷையையும் செழிப்பையும் அநுபவித்துத், தங்கள் அரசர்களால் பிதாவைப் போன்று கவலையுடன் பாதுகாக்கப்பட்டுவந்தபொழுதிலும்—ஆனால், எப்பொழுதும் இன்னொருவனால் ஊட்டப்படுகின்றவனுடைய கையானது மெல்ல மெல்ல ஆகாரத்தைத் தனது வாய்க்குக் கொண்டு செல்லும் சக்தியை இழந்து விடுகிறது. எவனொருவன் எப்பொழுதும் இன்னொருவனால் ரட்சிக்கப்பட்டு வருகிறானோ, அவனுடைய தற்காப்புச் சக்தியானது ஒருபொழுதும் பரிபூர்ணமாக வெளிப்பட முடியாது. மிக மிகப் பலமுள்ள வாலிபன்கூடத் தன் பெற்றோர்களால் குழந்தைபோலவே எப்பொழுதும் கருதப்படுவானாயின், குழந்தை

யாகவே யிருந்துவிடுகிறுன். திவ்ய குணம் வாய்ந்த அரசர்க ளாலே எப்பொழுதும் ஆளப்படுகிறதினுலும், ஜனங்களைக் காப்பாற்றுவதும் அவர்களுக்கு வேண்டியன செய்வதும் ஆகிய முழுக் கடமையும் அரசர்களுடையதே ஆய்விடுகிறதினு லும், அவர்கள் (ஜனங்கள்) ஸ்வராஜ்பக் கொள்கைகளை யறிந்து கொள்வதற்கு வேண்டிய சந்தர்ப்பம் ஒருநாளும் அடைய முடியாது. எல்லாவற்றுக்கும் அரசனையே முழுதும் சார்ந்துகொண்டு பொது நன்மைக்கோ அல்லது தற்காப்புக் கோ முயற்சி செய்யவேண்டிய கவலை ஒருபொழுதும் இல்லா மல் இருக்கின்ற ஒரு ஜன சமுகமானது மெல்ல மெல்ல உள் ளுள்ள சக்தியையும் பலத்தையும் இழந்ததாய்விடுகிறது. சார்ந்திருத்தலும் ரக்ஷையுமாகிற இந்த ஸ்திதி நெடுநாள் தொடர்ந்துகொண்டே போனுல், அது ஜனசமுக அழிவுக்குக் காரணமாகிவிடுகிறது. அது அழிவதற்கு நெடுநாட்கள் வேண்டா. மகரிஷிகளின் திவ்ய புத்தி சக்தியினுல் அரு ளப்பட்ட அறிவின் பலனுயுள்ள சாஸ்திரங்களினுல் விதிக்கப் பட்ட நியதி நியமங்களினுல் தேசத்தின் ராஜாங்கம் நடத்தப் படுகிறபொழுது, அத்தகைய ராஜாங்கமானது தனவந்தர், தரித்திரர், அறிவுள்ளவர்கள், அறிவில்லாதவர்கள், அரசன், குடிகள் ஆகிய எல்லோருடையவும் இடைவிடாத க்ஷேமத் துக்கு இட்டுச்செல்லத்தான் வேண்டுமென்பது யுக்தியினுல் தீர்மானிக்கப்படக்கூடும். ஆனுல், அந்த நியதிகளின் அநுஷ் டானம் அநுபவ வாழ்க்கையிலே எவ்வளவு தூரம் சாத்திய மாயிருந்தது அல்லது இருக்கலாம் என்பதை நாம் முன்னமே யே பார்த்திருக்கிறேம். ஆளப்பட்டவர்களுக்குத் தங்க

ளுடைய ஆட்சியில் உள்ள அதிகாரம்—இதுவே இக்காலத்தில் மேற்கு உலகத்துக் கொள்கை, "இந்தத் தேசத்தின் ஜனங்களின் ஆட்சி ஜனங்களால், ஜனங்களுடைய நன்மைக்காய் இருக்கவேண்டும்," என்ற வார்த்தைகளினுலுள்ள அமெரிக்க அரசாங்கத்தின் பகிரங்கக் கூற்றில் இக்கொள்கையின் கடைசி வெளிப்பாடு இடியொத்த சப்தத்துடன் எதிரொலிக்கப்படுகிறது. 'பூர்வீக இந்தியாவில் அடியோடு இல்லவே யில்லை' என்று சொல்லிவிட முடியாது. கிரேக்க யாத்திரிகர்களும் மற்றவர்களும்: அநேக, ஸ்வதந்திரமுள்ள, சிறிய சமஸ்தானங்கள் இந்தத் தேசம் முழுதும் பரந்துகிடக்கக் கண்டார்கள். ஸ்வராஜ்பத்தின் வித்தானது கிராமப் பஞ்சாயத்து வடிவத்திலாவது இருந்தது என்பதில் சிறிதும் சந்தேகமே யில்லை. இந்தப் பஞ்சாயத்து முறை இந்தியாவின் அநேக பாகங்களில் இன்னும் இருக்கிறது. ஆனுல், (அந்த) வித்து என்றும் வித்தாகவே யிருந்துவிட்டது; அந்த விதை நிலத்தில் இடப்பட்டாலும் மரமாக வளரவே யில்லை. ஸ்வராஜ்பத்தைப்பற்றிய இந்த எண்ணமானது கிராமப் பஞ்சாயத்து அமைப்பாம் கருநிலைமையைக் கடந்து செல்லவே யில்லை; ஜன சமுதாயத்திலே வியாபிக்கவே யில்லை.

மத வகுப்புகளிலே, பௌத்தமடங்களிலிருந்த சந்யாசிகளுக்குள்ளே, ஸ்வராஜ்பம் பரிபூர்ணமாக விருத்தியடைந் திருந்தது என்பதை நிரூபிப்பதற்கு நமக்கு வேண்டிய அத்தாட்சி யிருக்கின்றது. இப்பொழுதும், பஞ்சாயத்து முறையினுடைய ஸ்வராஜ்யக் கொள்கைகளினுடைய சக்தி நாக சந்யாசிகளுக்குள்

ளே எப்படி வேலை செய்கின்ற தென்பதை,—'ஐந்துபேருடைய ஆட்சி அவர்களிடமிருந்து எத்தகைய ஆழ்ந்த மர்யாதையைப் பெறுகின்றது என்பதை, ஒவ்வொரு நாகனும் தனது சொந்த வகுப்புக்குள்ளே எத்தகைய தனி யுரிமைகளைச் செலுத்தக் கூடு மென்பதை, அமைப்பினுடையவும் ஒற்றுமைச் செய்கையி னுடையவும் சக்தியின் எத்தகைய சிறந்த வேலைத்திறனை அவர்கள் தங்களுக்குள்ளே உடைத்தாயிருக்கிறார்கள் என்ப தைப் பார்த்து மனிதன் ஆச்சர்யப்படுகிறான்.

பௌத்தமதம் ஏற்பட்டவுடனே, பூமியைப் பெருக்கி யோடிய வெள்ளத்தில் வைதிகர்களின் செல்வாக்கு அழிந்து விழுந்தது; ராஜ செல்வாக்கு பிரதானத்துவம் எய்தியது. பௌத்த குருக்கள்: லௌகிக விஷயங்களில் கவன மில்லாத வர்கள், வீடற்ற சந்யாசிகள், மடங்களில் வசிப்பவர்கள், உல கத்தைத் தியஜித்தவர்கள். சாபங்களினாலோ, அல்லது மந்திர வாத அம்புகள் எய்தோ, ராஜசக்தியைத் தங்களுக்குள் அடக் கிக்கொண்டு வருதற்கு அவர்களுக்குத் திடச் சித்தமு மில்லை; அவர்கள் முயற்சி செய்வது மில்லை. அத்தகைய திடச்சித்தம் ஏதேனும் கொஞ்சம் இருந்தால்கூட, அதை நிறைவேற்றிக் கொள்வது இப்பொழுது அசாத்தியமாய்ப் போய்விட்டது. ஏனெனில், பௌத்தமதமானது நைவேத்தியம் உண்ணும் கட வுளர்கள் எல்லாருடையவும் ஸிம்ஹாசனங்களை ஆட்டி யசை த்து, அவர்களுடைய திவ்விய பதவிகளிலிருந்து அவர்களைக் கீழே தள்ளிவிட்டது. ஒரு புத்தனு யிருக்கும் நிலைமை அநே கம் பிரஹ்மாக்கள், அல்லது அநேகம் இந்திரர்கள் இவர்க

னுடைய திவ்விய பதவிகளைப் பார்க்கிலும் சிறந்ததாம்; இந்தப் பிரஹ்மாக்கள், அல்லது இந்திரர்கள் தெய்வ புருஷனும் புத்த னுடைய பாதங்களிலே விழுந்து பூஜை செய்வதில் ஒருவரோ டொருவர் போட்டி போடுகிறார்கள். இந்தப் புத்தத் தன்மை யை அடைதற்கு ஒவ்வொரு மனிதனுக்கும் உரிமை யுண்டு. இந்த வாழ்க்கையிலேயே அது எல்லோராலும் அடைதற்பால தே. கடவுளர்கள் வீழ்ந்துவிடவே, அதன் இயற்கைப் பல னாக அவர்களால் ஆதரிக்கப்பட்ட குருக்களின் மேன்மையும் போய்விட்டது.

ஆகவே, ராஜசக்தி யாகிற அந்தப் பராக்கிரமமான யாகக் குதிரையின் கடிவாளங்கள் வேதம் ஓதும் வைதிக னுடைய உறுதியான பிடிப்பினின்றும் நழுவிவிட்டது; இப்பொ ழுது ஸ்வதந்திரமாய்விட்டதினாலே, இப்பொழுது அது தனது அடக்கப்படாத சித்தத்துடனே எங்கு வேண்டுமானாலும் அலைந்து திரிய முடியும். இந்தக் காலத்திலே, மத்திய சக்தி யானது, சாம வேதங்களைப் பாடிக்கொண்டு, யஜுர்வேதத்தின் பிரகாரம் யக்ஞங்களைச் செய்துகொண்டிருந்த வைதிகர்களிட மில்லை; ஒருவரிடமிருந் தொருவர் பிரிந்து வெவ்வேறாய்ச் சிறிய ஸ்வதந்திர சமஸ்தானங்களை ஆண்டுகொண்டிருக்கும் க்ஷத்திரிய அரசர்களிடமும் அதிகார மில்லை. ஆனால், சக்தி யின் மத்தியஸ்தா னமானது புருஷர்களிடத்தே யுள்ளது; ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிவரையிலுள்ள இந்தியா முழுவதையும் வியாபித்துச், சமுத்திரத்தினால் சூழப்பட்ட பெரும்பூமியிடையே தடையற்ற ஆட்சி செலுத்துகின்ற சக்கர

வர்த்திகளிடத்தே யுள்ளது. இந்தக்காலத்துத்தலைவர்கள் விச்வாமித்ரரு மில்லை, வசிஷ்டருமில்லை; ஆனால், சந்திரகுப்தனும், தர்மாஸோகனும், மற்றவர்களும் போன்ற சக்கரவர்த்திகளே யாம். பௌத்தர்களுடைய காலத்திலே ஒரே ஏகாதிபத்திய ஆட்சியாய் ஆண்டுவந்த அந்த 'ஜகந்நாதர்' களைப் போன்று இந்தியாவின் ஸிம்ஹாசனத்தி லேறி, அதை அதன் மேன்மையாம் பீடத்துக்கு இட்டுச் சென்ற சக்கரவர்த்திகளே கிடையாது. பௌத்தர்களுடைய காலம் க்ஷீணித்து, ராஜபுத்திரர்களுடைய ஆட்சி ஆரம்பமாகவே, இந்திய சக்ராதிபத்தியத்தின் செங்கோலானது தனது அழுக்கற்ற மேன்மையிலிருந்தும் தவறியதாகி, ஆயிரம் துண்டுகளாக உடைந்து, சிறிய, சக்தியற்றவர்களாலே கையாளப்பட்டு வந்தது. இக் காலத்திலே பிராஹ்மணர்களுடைய செல்வாக்கு தலை கிளப்பிற்று: ஆனால், முன்போல எதிரியாகக் கிளம்பவில்லை; ஆனால், இச்சமயத்தில் ராஜ ஆதிக்கத்துக்கு உதவியாகக் கிளம்பிற்று.

இந்தக் குழப்ப சமயத்திலே, வைதீக வகுப்பாரும் ராஜ வகுப்பாரும் வேத காலங்களிலே ஆரம்பித்து எத்தனையோ காலமாகத் தொடர்ந்து சமணர்களுடையவும் பௌத்தர்களுடையவும் புரட்சிகளிலே முடிவெய்தும் வரையில் உயர்வுக்காகச் செய்துவந்த போராட்டமானது, அடியோடு நின்றுவிட்டது. இப்பொழுது இரண்டு பெரிய சக்திகளும் ஒன்றுக்கு ஒன்று நட்பா யிருந்தன; ஆனால், அரசர்களுடைய அந்தச் சிறந்த க்ஷாத்ர— யுத்தமே பிரியமாகவுடைய — பராக்கிரமம் போய்விட்டது; பிராஹ்மணர்களுக்கு லக்ஷணமா யிருந்த

அந்த ஆத்மீக வொளியும் போய்விட்டது; ஒவ்வொருவரும் தமது முந்திய உட்பலத்தை யிழந்துவிட்டார்கள். எதிர்பார்க்க லாமானபடி, இந்த இரண்டு சக்திகளினுடையவும் புதிய சேர்க்கையானது அந்யோந்யம் ஸ்வய நலங்களைத் திருப்தி செய்து கொள்வதிலே சீக்கிரம் உபயோகிக்கப்பட்டது மன்றியில், தங்களது பொது விரோதிகளை, முக்கியமாக அக்காலத்து பௌத்தர்களை அழிப்பதிலும் இதுபோன்ற இதர செய்கைகளிலும் தனது பிராணசக்தியைச் செலவழித்துச் சிதறிவிட்டது. அத்தகைய சேர்க்கையின் பயனாக ஏற்படக்கூடிய எல்லாத்தோஷங்களிலும்—அவையாவன, பொது ஜனங்களின் ரத்தத்தை யுறிஞ்சுதல், எதிரியைப் பழிக்குப் பழி வாங்குதல், இதரர்களுடைய சொத்துக்களை யாக்ரமித்து எடுத்துக்கொள்ளல்—இவை போன்றவற்றில் ஆழ்ந்து கிடந்தும், அவர்கள் பூர்வீக அரசர்கள் செய்துவந்த ராஜசூயத்தையும் மற்ற வேதயக்ஞங்களையும் நடத்துவதுபோலப் பாவனை செய்ய வீணே முயற்சித்தார்கள். பலன் யாதாயிற்றெனில், அவர்கள் ஆஷாடபூதிகளாலாய ஒரு பெரும்பரிவாரத்தினாலும், அதனாலேற்படும் முகஸ்துதிகளினாலும் கை கால்கள் கட்டப்பட்டவர்களானதுமன்றியில், மந்திர தந்திர ஆடம்பரங்களோடு கூடிய சடங்குகளினுடையவும், கிரியைகளினுடையவும் ஒரு முடிவற்ற வலையில் அகப்பட்டுக் கொண்டு, மேற்கிலிருந்து படையெடுத்து வந்த முகம்மதியர்களுக்குச் சீக்கிரத்தில் சுலபமாயும் உடனேயும் இரையாகி விட்டார்கள்.

வேதகாலங்களிலிருந்து ராஜ சக்தியுடன் உயர்வுக்காகப் போராடத் தொடங்கி அநேக காலமாக விடாது போராடிவந்த

அந்த வைதீக சக்தியை, க்ஷாத்ர சக்திக்கு விரோதமான அந்தச் செய்கையைக், கொஞ்சக் காலத்துக்காவது தடுப்பதில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் தமது பூலோக வாழ்க்கையின் பொழுது தமது அமானுஷ்ய சாமர்த்தியத்தினால் ஜயமடைந்தார். சமணர்களுடையவும் பௌத்தர்களுடையவும் புரட்சிக்காலங்களிலே, இந்தியாவில், அந்தப் பிராஹ்மண்ய சக்தி தனது வேலைக் களத்திலிருந்து அநேகமாக அழிக்கப்பட்டுவிட்டது, அல்லது, பல விரோதங்களுக்கு அடங்கி, பலஹீன வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தது. மிஹிர வம்சத்தின் கீழும், மற்றவர்களின் கீழும் இந்தியாவை ஆண்டுவந்த ராஜபுத்ரர்களின் ஆட்சி ஆரம்பிக்கவே, அந்தப் பிராஹ்மண்ய சக்தியானது தான் இழந்து போன பெருமையை மறுபடியும் அடைதற்குக் கடைசி முயற்சியொன்று செய்தது; அந்த உயர்பதவியை ஸ்தாபித்துக்கொள்ள அது செய்த முயற்சியிலே, மத்திய ஆசியாவிலிருந்து புதிதாக வந்த காட்டு மிராண்டிகளின் பயங்கரமான கூட்டங்களின் பாதங்களி னடியில் அது தன்னைத்தானே விற்றுக்கொண்டது; இன்னும், அவர்களைச் சந்தோஷப்படுத்தும்பொருட்டு, அவர்களுடைய வெறுக்கத்தக்க நடை யுடை பாவனைகளையும் வழக்கங்களையும் தேசத்திலே புகுத்திவிட்டது. இன்னும், அந்தப் பிராஹ்மண்ய சக்தியானது மூடர்களாகிய காட்டு மிராண்டிகளை ஏமாற்றுவதற்குள்ள சுலபமான வழிகளிலேயே சிரத்தை மிகுந்து, புதிய மந்திரங்களாலும் தந்திரங்களாலும் ஆதரிக்கப்பட்ட ரகஸ்யமான சடங்குகளையும் கிரியைகளையும் வழக்கத்திலே கொண்டுவந்து விட்டது. அப்படிச் செய்யும் காலத்தில், அதுவே தனது முந்திய ஞானம்,

தனது முந்திய பலம், பௌருஷம், நெடுங்காலமாக அடைந்து வந்த தனது பரிசுத்த வழக்கங்கள் இவற்றை யிழந்துவிட்டது. இவ்விதமாக, அது ஆர்யாவர்த்தம் முழுதையும் மிக மிகப் பாபகரமான, மிகமிகப் பயங்கரமான, மிகமிக அருவருக்கத்தக்க, கொடுமையான வழக்கங்களுடன் கூடிய ஒரு ஆழ்ந்த, பெரிய சுழலாக்கிவிட்டது. இந்த இழிந்த வழக்கங்களையும் மூட நம்பிக்கைகளையும் ஆதரிப்பதனுல் தவிர்க்க முடியாதபடி ஏற்படக்கூடிய பலனுக,அது சீக்கிரத்தில் தனது அந்தர்க்கதமான பலத்தையும் திடத்தையும் இழந்து, மிக மிகப் பலஹீன மடைந்துவிட்டது. மேற்கிலிருந்து வந்த முகம்மதியப் படையெடுப்புக்களாம் பிரசண்ட மாருதத்தின் ஸ்பர்ச மாத்திரத்தில் அது ஆயிரம் துண்டுகளாக உடைந்து வீழ்ந்துவிட்டது என்ன ஆச்சர்யம்! அந்த மகத்தான பிராஹ்மண்ய சக்தி விழுந்துவிட்டது,—மறுபடியும் அது எழுந்திருக்குமா வென்பதை எவர் அறிவார்?

ஆனுல், முகம்மதியர்களுடைய ஆட்சியில் வைதீக சக்தி மறுபடியும் உயிர்த்தெழுவது என்பது அறவே அசாத்தியமாம். தீர்க்கதர்சியாகிய முகம்மதுவே எந்த வடிவத்துடனும் வைதீக வகுப்பு இருக்கக் கூடாதென்ற கண்டிப்பான கொள்கையை உடையவரா யிருந்தார். இன்னும், இந்த சக்தியை அடியோடு அழிக்கவேண்டு மென்கிற எண்ணத்துடனே விதிகளையும் சட்டங்களையும் ஏற்படுத்தி, அப்படிச் செய்வதற்குத் தம்மாலான முயற்சி யெல்லாம் செய்தார். முகம்மதிய ஆட்சியிலே அரசனே உயர்ந்த குருபீடத்தை வகித்தான்; மத

சம்பந்தமான விஷயங்களிலே அவனே பிரதான வழிகாட்டியா யிருந்தான்; அவன் சக்ரவர்த்தியானபொழுது, அவன் முஸல்மான் உலகம் முழுமைக்கும் எல்லா விஷயங்களிலும் பரிபூர்ண அதிகாரம் வகித்த ஏகாதிபதி யாகலாமென்ற நம்பிக்கையை வளர்த்துக்கொண்டு வந்தான். முஸல்மானுக்கு யூதன் அல்லது கிறிஸ்தவன் மிகமிக அருவருக்கத்தக்க வஸ்து அல்லன்; அதிகம் கெடுதலாகச் சொன்னால், அவர்கள் நம்பிக்கை யற்ற மனிதர்களே. ஆனால், ஹிந்து அப்படியல்ல. முஸல்மான் கருதுகிறதாவது, ஹிந்து விக்கிரகாராதனை செய்கிறான்; ஆதலால், பகைக்கப் படவேண்டிய காப்பிரி; ஆகையினால், இந்த ஜன்மத்திலேயே, அவன் சித்திரவதை செய்யப்படுதற்கு உரித்தானவன்; மறு உலகத்திலே, நித்திய நரகம் அவனுக்குக் காத்துக்கொண் டிருக்கிறது. வைதிக வகுப்பாருக்கு —இந்தக் காப்பிரிகளின் ஞான குருக்களுக்கு முஸல்மான் அரசர்கள் காட்டக்கூடிய பெருந் தயவு யாதெனில், அவர்கள் தங்கள் வாழ்க்கையை மௌனமாய் எப்படியாவது நடத்திக்கொண்டு வரவும், கடைசி நிமிஷம் வரையில் காத்திருக்கவும் விட்டுவைத்தலேயாம். சில சமயங்களிலே, இதுவே, அளவுக்கு மிஞ்சிய அன்பாகக் கருதப்பட்டது. எந்த அரசனுடையவும் மதப்பற்று சிறிதும் அதிகம் அசாதாரணமாயிருந்தால், காப்பிரிக் கொலை மூலமாக ஒரு பெரிய யக்ஞத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் உடனே செய்யப்படும்.

ஒரு பக்கத்திலே, ராஜ சக்தியானது வேறு மதத்தையனுசரித்து வேறு பழக்கங்களையுடைய அரசர்களை மத்திய

ஸ்தானமாகக் கொண்டிருக்கிறது. இன்னொரு பக்கத்திலே வைதீக சக்தியானது ஜன சமுதாயத்தை யடக்கி அதற்குச் சட்டம் விதிக்க வல்ல தனது செல்வாக்கு நிலைமையிலிருந்து அடியோடு விழுந்துவிட்டது. கோரானும் அதன் விதிச் சட்டங்களும் மநுவினுடைய தர்ம சாஸ்திரங்களுடையவும் மற்றவற்றினுடையவும் இடத்தை எடுத்துக்கொண்டன. சமஸ்கிருத பாஷையின் இடத்திலே பாரஸீக பாஷையும் அராபி பாஷையும் வந்து சேர்ந்தன. சம்ஸ்கிருத பாஷையானது சுத்த மதசம்பந்தமான எழுத்துக்களுக்கும், ஜயிக்கப்பட்டவனும் இகழப்பட்டவனுமான ஹிந்துவினுடைய மத விஷயங்களுக்கும் மாத்திரம் கட்டுப்பட்டுக் கிடக்கவேண்டி வந்துவிட்டது. ஆகையினால், அதுமுதல் அது அலக்ஷியம் செய்யப்பட்ட வைதிகனுடைய கைகளில் செத்தும் சாகாததுமானதொரு வாழ்க்கை வாழ்ந்துவருகிறது. பிராஹ்மண்ய சக்தியின் எஞ்சிய அம்சமாகிய வைதீகனே விவாகச் சடங்கு முதலியன போன்ற முக்கியமல்லாத குடும்பச் சடங்குகளை நடத்துவதாம் கடைசி ஆதாரத்தின்மேல் சார்ந்துவிட்டான். அதுவும் முகம்மதிய அரசர்களுடைய தயவு எவ்வளவு அநுமதி கொடுத்ததோ அவ்வளவும்தான், அதுவரையிலும்தான்.

வேதகாலங்களிலும் அதற்கடுத்த காலங்களிலும் வைதிக சக்தியின் அழுத்தமான நெருக்கத்தினால் ராஜசக்தி வெளிப்பட முடியாமலிருந்தது. பௌத்தர்களுடைய புரட்சிக்காலத்திலே பிராஹ்மணர்களுடைய உயர்வு எப்படி வீழ்ச்சி யடைந்தது என்பதையும், இந்தியாவிலே ராஜசக்தி தனது உன்னத

ஸ்தானத்தை எப்படி யடைந்தது என்பதையும் நாம் பார்த்திருக்கிறோம். பௌத்த சக்ராதிபத்யம் விழுந்து முகம்மதிய சக்ராதிபத்யம் ஏற்படுவதற்குள் இடையே யிருந்த காலத்தில் இந்தியாவிலே ரஜபுத்ரர்கள் மூலமாக ராஜ சக்தியானது எப்படித் தனது தலையைத் தூக்க முயற்சித்தது என்பதையும், அது அந்த முயற்சியிலே எப்படித் தவறிவிட்டது என்பதையும், நாம் பார்த்திருக்கிறோம். இந்தத் தவறுதலின் அடியிலே வேத வைதீக வகுப்பார் தங்களுடைய முற்காலத்துக்கு ஒரு புதிய உயிர் கொடுக்கச் செய்த பழய மாதிரி முயற்சிகளுக்குக் காரணம் காணக்கூடும்.

பிராஹ்மண சிரேஷ்டத்துவத்தைத் தனது காலின் கீழே போட்டு மிதித்துக்கொண்டு முஸல்மான் அரசன் மௌர்யர், குப்தர், ஆந்திரர், க்ஷாத்ரபர்முதலிய சக்ரவர்த்தி வம்சங்களின் இழந்துபோன பெருமைகளை மிகுதியும் திரும்பவும் அடைய வல்லவனானான்.

குமரிளர், சங்கரர், ராமாநுஜர் போன்ற மகாத்மாக்கள் திரும்பவும் ஸ்தாபிக்க முயற்சிசெய்ததும் கொஞ்சக்காலம் ரஜபுத்திர அதிகாரத்தின் வாளினாலே ஆதரிக்கப்பட்டு சமணர்களும் புத்தர்களுமாகிற தனது விரோதிகளின் வீழ்ச்சியின் மீது தனது கட்டடத்தை மறுபடியும் கட்ட முயற்சித்ததுமான வைதீக சக்தி, முகம்மதிய ஆட்சியின்கீழ் விழிப்பே யறியாமல் என்றும் உறங்கும்படிச் செய்யப்பட்டுவிட்டது. இந்தக் காலத்திலே விரோதப்பான்மை அல்லது யுத்தம் அரசர்களுக்

கும் வைதீகர்களுக்கும் அல்ல, ஆனால், அரசர்களுக்கும் ஆசார்களுக்குமேதான். இந்தக் காலத்தின் கடைசியிலே ஹிந்து அதிகாரம் மறுபடியும் தலைதூக்கி மகாராஷ்டிரர்களின் மூலமாகவும் ஸீக்கியர்களின் மூலமாகவும் ஹிந்து மதத்தை யோரளவு புநர் உத்தாரணம் செய்வதிலே ஜயம் அடைந்தபொழுது, இந்தப் புநர் உத்தாரணங்களுடன் வைதீக சக்தி அதிகம் கிளம்ப நாம் காணவில்லை. ஆனால் ஸீக்கியர்கள் எந்தபிராஹ்மணனை யாவது தங்கள் வகுப்பினுள்ளே யெடுத்துக்கொண்டபொழுது, அவன் தனது முந்திய பிராஹ்மண அடையாளங்களை யெல்லாம் பகிரங்கமாக விட்டுவிட்டுத் தங்கள் சொந்த மதத்தின் அடையாளங்களையே அநுசரிக்கும்படி அவனைக் கட்டாயப் படுத்தினார்கள்.

இவ்விதமாக, நெடுங்காலம் இந்த இரண்டு சக்திகளும், செய்கையும் எதிர்ச்செய்கையுமாக விளையாடிய பின்னர், ராஜ சக்தியின் கடைசி ஜயமானது தேசத்தின் மதத்திலிருந்து அடியோடு வேறுபட்ட மதத்தை யநுஷ்டித்த அந்நிய அரசர்களின் பெயரால் அநேக நூற்றாண்டுகளுக்கு இந்திய பூமியில் எதிரொலித்தது. ஆனால், இந்த முகம்மதிய காலத்தின் முடிவில் இன்னொரு புத்தம் புதிய சக்தி மேடையிலே தோன்றி இந்திய உலகத்தின் விஷயங்களிலே தனது பராக்கிரமத்தை மெல்லக் காண்பிக்க ஆரம்பித்தது.

இந்தச் சக்தி மிகவும் புதியது; அதன்லக்ஷணமும் வேலைப் பாடுகளும் இந்திய மனத்துக்கு மிகவும் அந்நியமானவை;

அதன் எழுச்சி கருத முடியாதபடி அவ்வளவு வேக முள்ளதா யிருக்கிறது; அதன் பலம் அபாரமானது; இந்தியாவானது தனது பரப்பு முழுதும் அது ஸ்தாபிதமானதுபற்றி இப் பொழுதே ஆச்சர்யப்பட்டுக்கொண் டிருந்த பொழுதினும், அதன் விளையாட்டின் ஒரு சிறு பாகத்தையே இப்பொழுது பார்த்திருக்கிறது. இந்தச் சக்தி எதுவென்பதை இந்தியர்கள் நன்கு அறிந்துகொள்ளக்கூடும்.

இங்கிலாந்து இந்தியாவை வசப்படுத்திக்கொண்டதைப் பற்றி இங்கு நாம் பேசுகிறோம்.

மிகவும் புராதன காலங்களிலிருந்து இந்தியாவினுடைய பெருத்த ஐசுவர்யத்தி னுடையவும், கொழுத்த களஞ்சி யங்களினுடையவும் கீர்த்தியானது அநேக, சக்தி வாய்ந்த அந்நிய ஜன சமூகங்களிடத்திலே அதை ஜயிக்கவேண்டுமென்ற ஆசையைக் கிளப்பிவிட்டது. உண்மையில் அது மறுபடியும் மறுபடியும் அந்நிய ஜன சமூகங்களினாலே ஜயிக்கப்பட்டு வந் தது. அப்படியானால், இந்தியாவை இங்கிலாந்து கைக்கொண் டது இந்திய மனத்துக்கு ஏதோ புதிதும் நூதனமானதுமாம் என்று ஏன் நாம் கூறவேண்டும்?

பண்டையக்காலம் தொட்டு இந்தியாவானது ஞானபலம், மதசம்பந்தமான அறிவிலே ஏராளமான வித்தை, கடைசியாக, வேறுவழி யில்லாது போகுமாயின் கோபத்தோடு கூடிய சாப மாகிய ஆயுதம் இவற்றை ஆயுதங்களாகக் கொண்ட தபஸ்வி

யான, வீடற்ற வைதீகன் கோபத்தினால் முகத்தினைச் சுளிக்கும் பொழுது மிகமிகக் கர்வம் படைத்த ராஜசக்தியும் நடுங்கி நிற்க, பார்த்திருக்கிறது. ஸிம்ஹத்தின் முன்னே ஆட்டுக்கூட்டங்கள் செல்வது போலக் குடி ஜனங்கள் பயங்கரமான ஆயுதங்களுடனும் சைந்யங்களுடனும் கூடிய சர்வசக்தி வாய்ந்த அரசர்களைப் பின்பற்றிச் சென்று அவர்களுடைய ஆக்ஞைகளுக்கு மறு வார்த்தை பேசாமல் மௌனமாய்க் கீழ்ப்படிந்து நடக்க அது கண்டிருக்கிறது. தனவந்தர்களா யிருந்தபொழுதிலும், அரசனை மாத்திரமல்ல, ராஜகுடும்பத்தைச் சார்ந்த எவரைக் கண்டாலும் பயந்து நடுங்கி முழங்கால் மண்டியிட்டு மிக மிக இழிந்த மாதிரியில் இருந்து ஸலாம் செய்யப் பழகியிருக்கும் வைசிய ஜாதியாரையுடைய ஒரு தேசத்தின் காட்சி;—அந்தத் தேசத்திலிருந்து ஒரு கையளவு வைசியர்கள் தங்கள் சொந்தக் கடல்களையும் சமுத்திரங்களையும் கடந்து வெகு தூரத்திலே யுள்ள ஒரு அந்நிய நாட்டிலே வியாபாரம் செய்வதற்காக வந்து, தங்களுடைய கூர்மையான புத்தியினாலும் செல்வத்தினாலுமே அதன் புராதனமான, ஸ்திரமாக ஸ்தாபிதம் பெற்றுள்ள ஹிந்து முகம்மதிய ராஜ வம்சத்தார்களைத் தங்கள் பக்கத்தில் வசப்படுத்திக்கொண்டு, கடைசியில் மெல்ல மெல்ல அவர்களை யேமாற்றி,—அவர்களைப் பொம்மைபோலாட்டிவைப்பார்கள்; அது மாத்திரமல்ல; தங்களுடைய சொந்தத் திரவியம் விருத்தியாகும்படி உதவி புரியும் சக்தி வாய்ந்த உபாயங்களாக அவர்கள் அதைச் சொந்தமாக ஆளும் அரசர்களுடைய ஊழியங்களை விலைக்கு வாங்கி அதனுடைய ஆயுதங்களையும் வீரத்தையும் ஞானத்தையுமே உபயோகப்படுத்

திக்கொள்வார்கள்;—அந்தத் தேசத்திலே கர்வம் மிகுந்த ஒரு பிரபு, ஒரு பிரபுவைப் பார்த்து, ஒரு சாதாரண மனிதன் எதிர்த்துப் பேசியதற்காக அவனை எச்சரிப்பதுபோல "குப்பை மேடே, வெளியேபோ! ஒரு பிரபுவை நீ எதிர்க்கத் துணிகின்றாயா?" என்று சொன்னதாக அந்தத் தேசத்து மிகமிகப் பெரிய கவியின் திவ்ய எழுதுகோலினால் வர்ணிக்கப்பட்டிருக்கிறது;—அந்தத் தேசத்து சக்திவந்தர்களான பிரபுக்களின் சந்ததியார் சீக்கிரத்திலே, கிழக்கு இந்தியச் சங்கத்தார் எனப்பட்ட வியாபாரக் கூட்டத்தாரின் உத்தியோகங்களில் இந்தியாவுக்கு வந்து வேலைக்காரர்களாக நியமிக்கப்படுவதை மனுஷ்ய ஆசையின் பூர்த்தியாம் ஏணியின் உச்ச ஸ்தானமாகக் கருதுவார்கள்; உண்மையில் அத்தகைய காட்சி இதற்கு முன் அதனால் காணப்படாத ஒரு நூதனமே!

மனிதனிடத்திலே சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்களும் அதிகமாகவோ குறைவாகவோ இருப்பதுபற்றிப் பிராஹ்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்ரர் என்னும் நான்கு ஜாதியார் எங்கும் எல்லாக்காலங்களிலும், எல்லா நாகரிகமுள்ள சமுதாயங்களிலும் இருக்கின்றார்கள். வன்மையுடைய கால சக்தியினாலே அவர்களின் தொகையும் செல்வாக்கும் வெவ்வேறு தேசங்கள் விஷயத்தில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறாயிருக்கின்றன. சில தேசங்களிலே இந்த ஜாதிகளில் ஒன்றினுடைய ஜனத்தொகை அல்லது செல்வாக்கு இன்னொன்றைப் பார்க்கிலும் அதிகமாயிருக்கலாம்; சில காலத்திலே, (இந்த) ஜாதிகளில் ஒன்று மற்றவற்றைப்பார்க்கிலும் அதிக சக்தி

வாய்ந்ததா யிருக்கலாம். ஆனால், உலக சரித்திரத்தைக் கவன மாக ஆராய்ந்து பார்த்தால், பிரகிருதியின் நியதிக்கேற்ப, பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்ர ஆகிய நான்கு ஜாதிக ளும் ஒவ்வொரு சமுதாயத்திலும் ஒன்றன்பின் ஒன்றாக உலக த்தை யாண்டுவருகின்றன வென்பது தெரியவருகிறது.

சீனர்கள், ஸுமேரியர்கள், பாபிலோனியர்கள், எகிப்தி யர்கள், சால்டியர்கள், ஆர்யர்கள், ஐரேனியர்கள், அராபியர்கள் இவர்களுக்குள்ளே,—இந்தப் புராதன ஜன சமூகங்க ளெல்லா வற்றிலும் அவர்களுடைய சரித்திரத்தின் முதற்காலத்தில் சமுதாயத்தை நடத்திச் செல்லும் பரமசக்தி பிராஹ்மணன் அல்லது வைதீகனுடைய கைகளிலே யிருந்திருக்கிறது. இரண்டாவது காலத்தில், ஆளும் அரசன் க்ஷத்திரியன், அதாவது, சர்வாதிகாரப் பரம்பரை ராஜாங்கம், அல் லது தெரிந்தெடுக்கப்பட்ட சிலரால் பஞ்சாயத்து ஆட்சி. இங்கி லாந்தைத் தலைமையாகக் கொண்டுள்ள தற்காலத்திய மேனாட்டு ஜன சமூகங்களுக்குள்ளே சமுதாயத்தை யடக்கி யாள்கின்ற இந்தச் சக்தி வியாபாரத்தினால் தனவந்தர்களான வைசியர்க ளுடைய கைகளிலே முதன்முதலாவதாக வந்திருக்கிறது.

பூர்வீககாலத்து ட்ராய் நகரமும் கார்த்தேஜ் நகரமும் சமீப காலத்தில் வியாபார தேசங்களாயிருந்த வெனிஸும் அதுபோ ன்ற இதர சிறிய தேசங்களும் மிகவும் சக்தி வாய்ந்தனவாய பொழுதிலும் அவற்றினிடத்தே சரியான பொருளில் கூறத் தகுமாறு வைசிய சக்தியின் உண்மையான எழுச்சி யுண்டாக வில்லை.

நியாயமாகச் சொன்னால், ராஜ குடும்பத்தின் சந்ததியாருக்கே அந்தப் பழைய நாட்களின் வியாபாரமெல்லாம் சொந்தமாயிருந்தது; அவர்கள் சாதாரண ஜனங்களையும் தங்கள் கீழுள்ள வேலைக்காரர்களையும் வியாபாரம் நடத்துவதற்கு உபயோகித்துக்கொண்டு, அதனால் உண்டாகும் லாபங்களைத் தாங்களே யடைந்துவந்தார்கள். இந்தச் சில மனிதர்களைத் தவிர, வேறெவரும் எவ்வித சம்பந்தமும் வைத்துக்கொள்ள அல்லது தேச ராஜாங்கத்திலும் அது சம்பந்தப்பட்ட விஷயங்களிலும் கூடத் தங்கள் அபிப்பிராயத்தை எடுத்துக் கூற விடப்படுவதில்லை. எகிப்து போன்ற மிகமிகப் புராதனமான தேசங்களிலே வைதீகசக்தி கொஞ்சக்காலத்துக்கே தன்னந்தனி ஆதிக்கத்தை வகித்திருந்தது; பின்னர், அது ராஜசக்தியின் கீழ் அடங்கி அதற்கு ஒரு உதவியாக வாழ்ந்துவந்தது. சீனதேசத்திலே ராஜசக்தியானது கன்ப்யூஷியஸ் என்னும் மகானால் மத்தியமப்படுத்தப்பட்டு, 25 நூற்றாண்டுகளுக்கு மேலாக வைதீக சக்தியைத் தன்னுடைய எதிர்ப்பற்ற தீர்ப்புக்குக் கீழ்ப்படிந்து நடக்கும்படி செய்து, அதை யடக்கி நடத்திக்கொண்டு வருகிறது. சென்ற இரண்டு நூற்றாண்டுகளாக, தீபேத் தேசத்து சர்வ-க்ராஹ்ய லாமாக்கள் ராஜ குடும்பத்துக்கு ஞான குருக்களாயிருந்தபொழுதிலும், சீனசக்கரவர்த்திக்கு எல்லா விதத்திலும் அடங்கி நடந்து தங்கள் நாட்களைக் கழிக்கும்படிக் கட்டாயப்படுத்தப்பட்டிருக்கிறார்கள்.

இந்தியாவில் ராஜ சக்தியானது,இதர பூர்வீகநாகரிக ஜனசமூகங்கள் வைதீக சக்தியை ஜயித்துத் தனது இணையற்ற

அதிகாரத்தைப் பறையறைவித்து நெடுங்காலத்துக்குப் பின்னரே, அப்படிச் செய்ய முடிந்தது; ஆகையால், இந்திய சக்ராதிபத்தியத்தின் அமைப்பு, சீனம், எகிப்து, பாபிலோன் இவையும் இன்னும் இதர சக்ராதிபத்யங்களும் எழுந்து நெடுநாட்களுக்குப் பின்னர் ஏற்பட்டது. யூத ஜனங்களிடத்திலே தான் ராஜசக்தி வைதீக சக்தியின்மீது தனது ஆதிக்கத்தை ஸ்தாபித்துக் கொள்வதற்குக் கடும்பாடு பட்டபொழுதிலும் அந்த முயற்சியில் முழுத் தோல்வியை யடையவேண்டி வந்தது. யூதனிடத்திலே வைசியர்கள்கூட ராஜசக்தியை அடையவில்லை. ஆனால், சாதாரண குடி ஜனங்கள் வைதீகக் கொடுமையாம் விலங்குகளினின்றும் தங்களை விடுவித்துக்கொள்ள முயன்றபொழுது, உள்ளுக்குள்ளேயே யுண்டான கிறிஸ்தவமதம் போன்ற விரோதமான மத இயக்கக் குழப்பத்திலும் வெளியேயிருந்து நெருக்கிய ரோம சக்ராதிபத்தியத்தினாலும் சாகும்படி நசுக்கப்பட்டுவிட்டார்கள்.

முற்காலங்களிலே வைதிக சக்தி நெடுநாட்கள் போராடியபொழுதிலும் அதனினும் அதிக சக்தி வாய்ந்த ராஜ சக்தியினால் அடக்கப்பட்டது போல, இக்காலத்திலே புதிதாகக் கிளம்பிய வைசிய சக்தியின் கடோரமான அடியினால் அநேக ராஜ கிரீடங்கள் மண்ணிலே புருண்டுவிட்டன; அநேக செங்கோல்கள் துண்டு துண்டாக்கப்பட்டுவிட்டன. நாகரிக தேசங்கள் சிலவற்றில் கொஞ்சம் அதிகாரத்துடன் தங்கள் ராஜ டாம்பீகத்தையும் பெருமையையும் காண்பித்துக்கொண்டிருக்கும் படி விடப்பட்டிருக்கிற சில சிம்ஹாஸனங்களுக்கும் இந்த

வைசிய ஜாதியாருடைய—உப்பு, எண்ணெய், சர்க்கரை, சாராயம் இவற்றை வியாபாரம் செய்பவர்களுடைய - பிரமாண்டமான ஐச்வர்யத்தினால் ரக்ஷிக்கப்பட்டு, ஓர் அலங்காரமான, அழகிய முன்னணியாகவும், பின்னே யிருந்துகொண்டு உண்மையில் அரசாட்சி செய்யும் கூட்டத்தாராகிய வைசியர்களுடைய பிரதாபத்தை வெளிப்படுத்துவதாகவும் வைக்கப்பட்டிருக்கிறது.

அந்த மகத்தான, புதிதாகக் கிளம்பிய வைசிய சக்தி,—இதன் ஆக்ஞையினால் ஒரு துருவத்திலிருந்து இன்னொருதுருவத்துக்கு ஒரு நிமிஷத்தில் மின்சாரமானது செய்திகளைக் கொண்டுபோகின்றது; அதன் பெரிய ரஸ்தாவானது மலையுயரம் கிளம்பும் அலைகளையுடைய சமுத்திரமா யிருக்கின்றது; அதன் சொற்படி, பூமண்டலத்தின் ஒரு பாகத்திலிருந்து இன்னொரு பாகத்துக்கு மிகமிகச் சுலபமாகச் சாமான்கள் கொண்டுபோகப்படுகின்றன. அதன் ஆக்ஞையிலே பெரிய பெரிய அரசர்களும் நடுங்குகின்றார்கள்;—அந்தப் பிரமாண்டமான அலையின் வெள்ளையான நுரையின் மேற்பரப்பிலே—சர்வ ஜித்தாகிய வைசிய சக்தியானது,— அதன் பலவிதப் பெருமையிலும் இங்கிலாந்து தேசத்தின் கம்பீர சிம்ஹாசனமாக அமர்ந்திருக்கிறது.

ஆகையால், இந்தியாவை இங்கிலாந்து ஜயித்ததானது, நாம் நம்பும்படி அடிக்கடி கேட்கப்படுவதுபோல, இயேசுவினால் அல்லது பைபில் புத்தகத்தினால் ஆய ஜயமன்று; அது, மொகு

லாயர்களும் பட்டாணியர்களும் இந்தியாவை ஜயித்தது போன்றதுமல்ல. ஆனால், இயேசுவின் நாமம், பைபில் புத்தகம், ஆடம்பரமான அரண்மனைகள், பூமியையே அசைத்துக் கொண்டு நடக்கின்ற ரதகஜதுரகபதாதிகளாலாய சைன்யங்களின் பலமான காலடியோசை, யுத்த பேரிகைகள்-கொம்புகள்-நகராக்கள் முதலியவற்றின் சப்தங்கள், ராஜ சிம்ஹாசனத்தின் சிறந்த காட்சி இவற்றுக்குப் பின்னே,—இவை யெல்லாவற்றுக்கும் பின்னே இங்கிலாந்தினுடைய உண்மையான சாந்நித்தியம் எப்பொழுதும் இருக்கிறது;—அந்த இங்கிலாந்தினுடைய கொடி தொழிற்சாலையின் புகை போக்கியாம், படைகள் வியாபாரிகளாம், யுத்தகளங்கள் உலகத்து வியாபாரஸ்தலங்களாம், சக்கரவர்த்தினி, அதிருஷ்ட தேவதையாம். அது இது வரையில் ஒருபொழுதும் பார்த்திராத நூதனமாமென்று—இந்தியாவை இங்கிலாந்து இப்படி ஜயித்தது நூதனமாமென்று—இதனாலேதான் நான் முன்பு அப்படிக் கூறினேன். இந்தப் புதிய ராக்ஷசசக்தியுடன் இந்தியா இடபடத்தொடங்கியிருத்தலினால் இந்தியாவில் எந்த மாதிரி புதிய புரட்சி யுண்டாகுமென்பதும், அந்தப் புரட்சியின் பலனாக என்ன புதிய மாறுதல் பிற்கால இந்தியாவுக்கு ஏற்படப்போகிறதென்பதும் அதன் பூர்வ சரித்திரத்திலிருந்து ஊகிக்கப்பட முடியாது.

பிராஹ்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் ஆகிய நான்கு ஜாதிகளும் ஒன்றன்பின் ஒன்றாக உலகத்தை யாள்கின்றனவென்று முன்னர் நான் கூறியுள்ளேன். இந்த ஜாதிகளில் ஒவ்வொன்றும் பரம அதிகாரம் செலுத்திய காலங்களிலே,

ஜனங்களின் நன்மைக்கான சில கார்யங்கள் செய்யப்பட்டன; ஆனால், மற்றக் கார்யங்கள் அவர்களுக்குத் தீங்கு உண்டுபண்ணுவனவா யிருந்தன.

வைதிக சக்தியின் அஸ்திவாரம் புத்தி பலத்தை யாதாரமாக உடையது; ஆயுதங்களை உதவியாகக் கொண்ட ஸ்தூல பலத்தை ஆதாரமாகக் கொண்டதல்ல. ஆகையால், வைதிக சக்தியின் ஆதிக்க காலத்திலே புத்தி விற்பத்தியும் பாஷா ஞானமும் அதிகமாக இருந்தது. ஒவ்வொரு மனுஷ்ய ஹிருதயமும் ஐம்புலன் அறிவுக்கு அதீதமான ஆத்மீக உலகத்துடன் சம்பந்தம் வைத்துக்கொள்ளவும், அதிலிருந்து உதவி பெறவும் எப்பொழுதும் ஆவலுள்ளதா யிருக்கிறது. அந்த உலகத்துக்குள் நுழைவது பொதுவாக மனுஷ ஜாதியாருக்குச் சாத்தியமில்லை; தங்கள் புலன் இந்திரியங்களைப் பரிபூர்ணமாக அடக்கக்கூடியவர்களும், சத்துவகுண சாரம் அதிகமாக வுள்ள லக்ஷணத்தை யுடையவர்களும் ஆகிய ஒரு சில மகாத்மாக்களே ஜடத்தினுடைய பயங்கரமான அணிவகுப்பைப் பிளந்து சென்று, நேருக்கு நேர் ஐம்புலன்கட் கதீதமான வஸ்துவைச் சந்திக்கிறார்கள்,—அந்த ராஜ்யத்தின் வேலைப்பாடுகளை யறிகின்ற அவர்களே அதிலிருந்து செய்திகள் கொண்டுவந்து கொடுத்து, மற்றவர்களுக்கு மார்க்கத்தைக் காண்பிக்கிறார்கள். இந்த மகாத்மாக்களே மனுஷ்ய சமுதாயங்களுக்குக் குருக்களாவார், ஆதி வழிகாட்டிகளாவார், தலைவர்களாவார், இவற்றை நடத்துபவர்களாவார்.

வைதிகன் தேவர்களைத் தெரிந்து கொண்டு, அவர்களுடன் சம்பந்தம் வைத்துக்கொள்கிருன்; ஆகையினால், அவன் ஒரு தேவனுகவே பூஜிக்கப்படுகிருன். அவன் உலக நினைப்புக்களைப் பின்னே தள்ளி ஒதுக்கிவிடுகிருனைபடியால், ஆகாரம் சம்பாதிப்பதற்கு அவன் நெற்றி வெயர்வை நிலத்தில் விழப் பாடுபடவேண்டியிருக்கிறதில்லை. எல்லா ஆகாரத்தினுடையவும் பானத்தினுடையவும் மிகமிகச் சிறந்தவையும் மிக மிக முக்கியமானவையுமான பாகங்கள் தேவர்களுக்கு நைவேத்தியங்களாகக் கொடுக்கப்பட வேண்டியனவாம். பூலோகத்திலே இந்தத் தேவர்களின் பிரத்தியட்சப் பிரதிநிதிகள் வைதிகர்களே யாவர். அவர்க (வைதிகர்க)ளுடைய வாய்களின் மூலமாகவே அவர்கள் (தேவர்கள்) நைவேத்தியங்களை எடுத்துக்கொள்கிருர்கள். தெரிந்தோ, தெரியாமலோ, சமுதாயமானது வைதிகனுக்கு ஏராளமாகச்சாவகாசம் கொடுக்கின்றது; ஆகையினால், பிரகிருதியிலே தியானம் செய்துகொண்டும், உயர் நினைப்புக்களை நினைத்துக்கொண்டுமிருக்கும்படியான சந்தர்ப்பத்தை அவன் அடையமுடிகிறது. ஆதலால், வைதிக சக்தி ஆதிக்கம் வகிக்கும் காலத்திலே முதலில் அறிவினுடையவும் வித்தையினுடையவும் அபிவிருத்தி ஆரம்பமாகின்றது. ஒரு பக்கத்திலே பயங்கரமாண ஸிம்ஹமாகிய அரசனுக்கும், மறு பக்கத்திலே பயந்து நடுங்கும் ஆட்டுக்கூட்டமாகிய குடி ஜனங்களுக்கு மிடையில் வைதிகன் நிற்கிருன். அழிக்கும் எண்ணத்துடன் ஸிம்ஹம் பாய்கின்ற பாய்ச்சல் வைதிகனுடைய கைகளிலேயுள்ள ஆத்ம சக்தியின் அடக்குக்கோலினுல் தடுக்கப்படுகின்றது. ஐச்வர்யத்தையும் ஆட்களையும் உடைத்தாயிருக்கின்ற கர்வத்தினுல்

பைத்திய மேறியிருக்கின்ற அரசனுடைய கொடுங்கோல் மனத்தின் அக்கினியானது அவனுடைய வழியில் எதிர்ப்படுகின்ற எதையும் எரித்துச் சாம்பராக்க வல்லதாயிருக்கின்றது. ஆனால், தண்ணீர் நெருப்பை யணைப்பதுபோல, ஐச்வர்யத்தையோ ஆட்களையோ உடைத்தாயிராமல், ஆனால், ஆத்மீக சக்தியையே பலமாகக் கொண்டுள்ள வைதிகனிடமிருந்து வரும் ஒரு வார்த்தையே அந்தக் கொடுங்கோல் ராஜமனத்தை யடக்கக்கூடியதா யிருக்கிறது. வைதீக ஆதிக்கத்தின் உயர்வுடனே நாகரிகத்தின் முதலாவது உற்பத்தியும், மிருக லட்சணத்தின் மீது தெய்வ லக்ஷணம் அடைகின்ற முதலாவது ஜயமும், மனுஷ்ய சரீரமாகிற இந்தச் சதைக் குவியலில், பிரகிருதியின் இந்த அடிமையில் அடங்கிக்கிடக்கின்ற தெய்வீக சக்தியின் முதலாவதான வெளிப்பாடும் ஜடத்தின்மீது சைதந்யம் அடைந்த முதலாவது வெற்றியும் காணப்படுகின்றன. வைதிகனே ஜடத்திலிருந்து சைதந்யத்தைப் பகுத்தறியும் முதலாவது விவேகியாவான்; மறு உலகத்துடன் இவ்வுலகு ஐக்கியமாவது முதலாவது உதவியாவான்; தெய்வத்தினிடமிருந்து மனிதனிடம் வந்த முதலாவது தூதனுவான்; அரசனுக்கும் குடிகளுக்கும் இடையே யிருந்து இருதிறத்தாரையும் சேர்த்து வைக்கின்ற மத்தியபாலமுமாவான். ஜகத்தினுடையக்ஷேமத்தினுடையவும் நன்மையினுடையவும் முதலாவது துளிர் அவனுடைய ஆத்மசக்தியினால், வித்தையினிடத்தும் அறிவினிடத்தும் அவனுக்குள்ள சிரத்தையினால், அவனுடைய வாழ்க்கையின் பல்லவியாயிருந்து கொண்டு அவனுடைய சொந்த ஜீவ ரத்தப் பெருக்கினால்கூடப் பாய்ச்சப் பெற்று

வளர்கின்ற அவனுடைய தியாகத்தினால்போஷிக்கப்படுகிறது. ஆகையினால்தான், ஒவ்வொரு தேசத்திலும் மிகமிக முதன்மையான பூஜை அவனுக்கு அளிக்கப்பட்டது.

தீமைகளும் இருக்கின்றன. ஜீவித வளர்ச்சியுடன் அதே காலத்தில் மரணவித்தும் விதைக்கப்பட்டிருக்கிறது. இருட்டும் வெளிச்சமும் எப்பொழுதும் ஒன்றாகவே செல்கின்றன. தகுந்த காலத்தில் தடுக்கப்படாவிட்டால், சமுதாயத்தை யழிக்கக் கூடிய பெரிய தீமைகளும் உண்மையில் இருக்கின்றன. கடித்த ஜடத்தின் மூலமாக நடைபெறும் சக்தியின் லீலை சகலருடைய அநுபவத்துக்கும் ஏற்றதா யிருக்கிறது; யுத்த கோடரிகளினுடையவும் வாள்களினுடையவும் விளையாட்டிலே, அல்லது நெருப்பினுடையவும் மின்னலினுடையவும் எரிக்கும் தன்மைகளிலே காணப்படுகிறபடி ஸ்தூலஜட சக்தியின் பலமான வெளிப்பாட்டை ஒவ்வொருவனும் பார்க்கிறான்; ஒவ்வொருவனும் தெரிந்துகொள்கிறான். எவரும் இந்த விஷயங்களைப்பற்றிச் சந்தேகிக்கிறதில்லை; அவை உண்மைதானா என்று ஒரு பொழுதும் கேள்வியே ஏற்பட முடியாது. ஆனால், எங்கே சக்தியின் ஸ்தானமும் அதன் லீலையின் மத்தியமும் முழுதும் மனமேயா யிருக்கிறதோ, எங்கே அந்தச் சக்தியானது சில விசேஷ வார்த்தைகளில், அவற்றை உச்சரிப்பதிலே சில விசேஷ மாதிரிகளில், சில ரகஸ்ய அசைகளைப்பற்றிச் செய்யும் மானசிக ஜபத்தில் அல்லது இவைபோன்றுள்ள, மனத்தினுடைய வேறு முறைகளிலும் பொருத்தங்களிலும் கட்டுப்பட்டுக் கிடக்கின்றதோ, அங்கே,—ஒளி நிழலுடன் சேர்ந்திருக்

கிறது; அங்கே, ஏற்றமும் இறக்கமும் மற்றப்படி அசைக்க முடியாத நம்பிக்கையை இயற்கையாகக் கலக்கின்றன; அங்கே, விஷயங்கள் நேருக்கு நேரே பிரத்தியக்ஷத்தில் பார்க்கப்படுகிற பொழுதிலும் கூட அவை உண்மையான சம்பவங்கள் தானா வென்று சந்தேகங்கள் கிளம்புகின்றன. எங்கே துன்பம், பயம், கோபம், தியசிந்தை, பதிலுக்குப் பதில் செய்யவேண்டுமென்ற எண்ணம் இவையும் இவை போன்ற மனிதனுடைய குணங்களும் ஒவ்வொருவரும் அறியக்கூடிய ஆயுத சக்தியை விட்டுவிட்டு, நோக்கத்தை யடைவதற்கு ஸ்தூல ஜட உபாயங்களை விட்டுவிட்டுத், தங்கட்குப் பதிலாக ஸ்தம்பனம், உச்சாடனம் வசிகரணம், மாரணம் இவை போன்ற ரகஸ்ய மனோமுறைகளைத் தங்கள் பலப்ராப்தியின் பொருட்டு ஏற்படுத்திக் கொள்கின்றனவோ,—அங்கே, புகைபோன்று தெளிவின்மையாம் ஒரு மேகம் மறைவாயுள்ள அத்தகைய ரகஸ்ய உலகத்திலே எப்பொழுதும் வசித்துக் காலம் கழித்து வருகின்ற அந்த மனிதர்களுடைய மன ஆகாயத்தைச் சூழ்ந்துகொள்வது இயற்கையே. அத்தகைய ஒருமனத்துக்கு நேர்முறையில் செய்யும் வழி தோன்றாது. தோன்றினாலும், மனமானது அதைவளைவு பாதைகளிலே திருப்பிவிட்டுவிடுகிறது. இதெல்லாவற்றினுடையவும் கடைசிப் பயன் யாதெனில், உண்மை யின்மையேயாம்,—மிக மிகச் சுருங்கிய, குறுகிய ஹிருதயம் உண்டாவதேயாம்; எல்லாவற்றுக்கும் மேலாக மிகமிகப் பயங்கரமானது யாதெனில், இன்னொன்று பரம சிரேஷ்டத்துவத்தை யடைந்ததைக் கண்டு தீய சிந்தையுடனே பொறாமையுண்டாய் அதனா லேற்படும் கடுமையான அற்ப புத்தியாம். வைதிகன் "தேவர்களை

எனக்குக் கீழாக்கியிருக்கிறதும், சரீர மனோ வியாதிகளின்மீது எஜமானத்துவம் கொடுத்திருக்கிறதும், பேய்-பிசாசுகள்-இன்னும் பார்வைக் குட்படாத இதர எக்ஷணிகள் இவை எனக்கு ஊழியம் செய்யும்படிச் செய்திருக்கிறதும் ஆகிய சக்தியை நான் ஏன் விட்டுவிடவேண்டுமே? கடுமையான தியாக(ம்செய்து)த்தை விலையாகக்கொடுத்து நான் இந்தச்சக்தியை அருமையாக அடைந்திருக்கிறேன். இதை யடைவதற்கு நான் என்னுடைய ஐச்வர்யம், பெயர், கீர்த்தி, சுருக்கத்தில்: எனது பூலோக சுகங்கள், சௌகர்ய்யங்கள் எல்லாவற்றையும் தியாகம் செய்திருக்கிறேன்; அப்படியிருக்க, நான் ஏன் மற்றவர்களுக்கு அதைக் கொடுக்கவேண்டும்?'' என்று தானே சொல்லிக்கொள்வது இயற்கைதான். இன்னும் அந்தச் சக்தியானது முழுதும் மானசிகமானது. அதைப் பரிபூர்ண ரகஸ்யமாக வைத்துக்கொள்வதற்கு எத்தனைச்சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. சந்தர்பங்களாம் இந்தச் சக்கரத்திலே யகப்பட்டுக்கொண்டு, மனுஷ்யப் பிரகிருதியானது தான் அவசியம் எப்படியாய்த் தீரவேண்டுமோ அப்படி யாய்விடுகிறது. எப்பொழுதும் இடைவிடாத தன் மறைவையே அப்பியசிக்கப் பழகுவதினால் அது மிகுந்த ஸ்வயநலத்துக்கும் வேஷத்துக்கும் இரையாகிவிடுகிறது. கடைசியாக அவற்று லேற்படும் விஷம் நிறைந்த பலன்களிலே அழிந்துவிடுகிறது. மறைத்துவைக்கவேண்டுமென்ற இந்த ஆசையே தகுந்த காலத்தில் எதிர்ச்செய்கையாகத் திருப்பியடிக்கின்றது. தகுந்தபடி யநுபவித்து வியாபிக்கச் செய்யவேண்டிய முயற்சியில்லாக் குறையால் எல்லா அறிவும், எல்லா ஞானமும் அநேகமாக இழந்துவிடப்படுகிறது; எஞ்சியுள்ள கொஞ்சமும் பிர

கிருதி யதீதமான ஸ்தானத்தி லிருந்து கிடைக்கப்பட்டதாகக் கருதப்படுகிறது; ஆகையால், நூதனத்துவத்தை யடைந்து புதிய கலைகளைச் சம்பாதிப்பதற்குப் புது முயற்சிகள் செய்ய வேண்டியதற்குப் பதிலாகப் பழயதில் எஞ்சியுள்ளவற்றை அவற்றை யடைந்திருக்கும் அழுக்கை யெல்லாம் நீக்கிச் சுத்தம் செய்து விருத்தி பண்ணக்கூட முயற்சிப்பது பயனற்றதாயும் வீணுயும் கருதப்படுகிறது. இவ்விதமாக முந்திய ஞானத்தை, முந்திய, எதையும் லக்ஷியம் செய்யாத தன்னம் பிக்கைக் குணத்தை யிழந்தவனுகி, வைதிகன் இப்பொழுது தன்னுடைய முன்னோர்களின் பெயரால்மாத்திரம் பெருமையடைந்து கொண்டு, சிரேஷ்டர்களான தன்னுடைய முன்னோர்களால். அநுபவிக்கப்பட்டுவந்த அதே பெருமையையும், அதே பாத்தியதையையும்; அதே மரியாதையையும், அதே உயர்வையும் அழுக்குப்படாமல் காப்பாற்ற வீணே முயற்சிக்கிருன். பலன் யாதெனில், அவன் இதர ஜாதிகளுடன் கடுமையாக முட்டிக்கொள்கிருன்.

எங்கே ஒரு புதிய, முன்னிலும் அதிக பலமுள்ள ஜீவிதத்தின் எழுச்சி யுண்டாகின்றதோ, அங்கே அது பழயதும் அழிந்து போய்க்கொண்டிருப்பதுமானதை ஜயித்து, அந்த இடத்தைத் தான் அடைய முயற்சிக்கும் என்பது பிரகிருதி நியதி. தகாதது மரிப்பதற்கும் மிகமிகத் தகுந்தது உயிர் வாழ்தற்கும் பிரகிருதி அநுகூலமாயிருக்கிறது. வைதீக ஜாதிக்கும் இதர ஜாதிகளுக்கும் உண்டான போராட்டத்தின் கடைசிப் பயன் இன்னதென்று முன்னமேயே சொல்லப்பட்டுவிட்டது.

வைதிகனுடைய உயர்வு காலத்திலே அத்தியந்த ஆவலுடன் செய்யப்பட்ட உண்மை யாராய்ச்சியிலே செலவழிக்கப்பட்ட அவனுடைய அந்தத் தியாகமும் தன்னடக்கமும் தபஸும் அவனுடைய வீழ்ச்சிக் காலத்திலே தன்னலத்தைத் திருப்தி செய்யும் விஷயங்களைச் சேகரிப்பதிலும் இதரர்கள் மீது தனக்கு ஆதிக்கம் உண்டு என்பதை வியாபகப்படுத்திக் கொள்வதிலும் புதிதாக உபயோகப்படுத்தப்பட்டுச், செலவழிக்கப்பட்டன. எந்தச் சக்தி யவனிடத்தில் மத்திய ஸ்தானத்தை யடைந்து அவனுக்கு எல்லாக் கௌரவத்தையும் பூஜையையும் அளித்ததோ அந்தச் சக்தி இப்பொழுது அதனுடைய உயர்ந்த, திவ்ய பதவியிலிருந்து மிகமிகத் தாழ்ந்த நரகத்துக்கு இழுத்துக்கொண்டு வரப்பட்டுவிட்டது. வைதிக சக்தியானது லக்ஷியத்தை யிழந்துவிட்டு, நோக்க மற்றதாகிச், சிலந்திப்பூச்சியைப்போலத் தன்னாலேயே பின்னப்பட்ட வலையில் அகப்பட்டுக் கிடக்கின்றது. மற்றவர்களின் கால்களிலே மாட்டுவதற்குத் தலைமுறை தலைமுறையாக மிகமிக மிகுந்த ஜாக்கிரதையோடு செய்யப்பட்ட விலங்கு இப்பொழுது அதனுடைய கால்களையே ஓராயிரம் சுற்றுகச் சுற்றிப் பிணைத்துக் கட்டியிருக்கிறது மன்றியில், நூற்றுக்கணக்கான வழிகளில் அதை அசையவொட்டாமலும் செய்துவருகின்றது. இந்த எண்ணற்ற பந்தங்களாகிய இரும்புப்பிடியிலே ஜனசமுதாயத்தை எப்பொழுதும் வைத்துக்கொண்டிருக்கவேண்டுமென்ற எண்ணத்துடன், சரீரத்தையும் மனத்தையும் சுத்தி செய்வதற்கு வெளியுபாயங்களாக அது எல்லாப் பக்கங்களிலும் பரப்பிய, கணக்கற்ற சடங்குகள், கிரியைகள், வழக்கங்கள் இவற்றாலாய வலையின்

முடிவற்ற நூலிலகப்பட்டு,— வைதிக சக்தியானது இவ்வித மாக இனிமேல் எழுந்திருக்க முடியாதபடி உச்சந்தலைமுதல் உள்ளங்கால் வரையில் சிக்கிக்கொண்டு இப்பொழுது ஏகத்தி லே தூக்கமுற் றிருக்கிறது. அதிலிருந்து இப்பொழுது தப்பிக்க முடியாது. வலையைக் கிழித்துவிட்டால், வைதிக னுடைய வைதிகத்தன்மை அஸ்திவாரம் வரையில் அசைக்கப் பட்டுவிடும். ஒவ்வொரு மனிதனிடத்திலும், இயற்கையா கவே, அபிவிருத்தி யடைவேண்டு மென்ற பலமான ஒரு ஆசை வேரூன்றி யிருக்கிறது. மனிதன் வைதிக விலங்குகளால் கட் டப்பட்டுக் கிடக்கும்வரையில், இந்த ஆசையைப் பூர்த்தி செய் துகொள்வது அசாத்தியம் என்று கண்டு இந்த வலையைக் கிழித்தெறிந்து, பணம் சம்பாதிக்கிறதற்காக மற்ற ஜாதியா ரின் தொழில்களை பெடுத்துக்கொள்கிறவர்கள்,— அவர்களைச் சமுதாயமானது அவர்களுடைய உரிமைகளினின்றும் நீக்கி விடுகிறது. தலையிலே சிகை வைத்துக்கொள்வதற்குப் பதிலாக ரோமத்தைக் கத்தரித்துவிட்டுக்கொள்கின்ற தங்களது பூர் விக வழக்கங்களையும் முன்னோர்களின் பழக்கங்களையும் விட்டுவிட்டு, அரை ஐரோப்பிய உடையை உடுத்துக்கொண்டு, இருஜாதி மாதிரியில் மேனாட்டிலிருந்து புதிதாகப் புகுத்தப் பட்ட வழக்கங்களை யநுசரிக்கின்ற பிராஹ்மணர்கள் எனப்படு வோருடைய பிராஹ்மணத் தன்மையில் ஜன சமுதாயத் துக்கு நம்பிக்கை கிடையாது. இன்னும், புதிதாக வந்திருக் கும் இந்த ஆங்கில அரசாங்கமானது எங்கெல்லாம் புதிய முறைக் கல்வியை நுழைத்து ஐச்வர்யம் பெருகுவதற்குப் புதிய கால்வாய்களைத் திறந்துவிடுகின்றதோ, இந்தியாவின்

அந்தப் பாகங்களிலெல்லாம் எண்ணற்ற பிராஹ்மண வாஸிகள் தங்கள் பரம்பரை வைதீகத் தொழிலை விட்டுவிட்டு, மற்ற ஜாதியாருடைய தொழில்களை யேற்றுக்கொண்டு பணம் சம்பாதித்துத் தனவந்தர்களாக முயற்சித்து வருகிறார்கள். அதன் பலன் யாதெனில், வைதீக வகுப்பாருடைய வழக்கங்களும் பழக்கங்களும் - முன்னோர்களிடமிருந்து பரம்பரையாக வந்தவை - சிதற அடிக்கப்பட்டுத், தேசத்திலிருந்து வெகு சீக்கிரம் மறைந்து போய்க்கொண்டிருக்கின்றன.

கூர்ஜர தேசத்தில், பிராஹ்மணர்களுடைய ஒவ்வொரு இரண்டாந்தர வகுப்பும் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது; ஒன்று, இன்னும் வைதீகத்தொழிலைப் பற்றிக்கொண்டிருப்பவர்களது; மற்றது, மற்றத் தொழில்களினால் பிழைப்பது. அங்கே, முதலாவது பிரிவினரே வைதீகத் தொழிலை நடத்திக்கொண்டு, பிராஹ்மணர்கள் எனப்படுகிறார்கள். மற்றப் பிரிவினர்களும் பரம்பரையாகப் பிராஹ்மணப் பெற்றோர்களுடைய சந்ததியார்களே யாயினும், முதலாவது பிரிவினர் பிந்தியவர்களுடன் விவாக சம்பந்தம் வைத்துக் கொள்வதில்லை; திருஷ்டாந்தமாக, "நாகர பிராஹ்மணன்" என்ற பெயரானது பிக்ஷையேற்றுப் பிழைக்கும் வைதீகர்களாகிய பிராஹ்மணர்களையே குறிப்பிடுகிறது; "நாகர" என்ற பெயர் மாத்திரம் அரசாங்கத்தில் வேலையிலமர்ந்துள்ள, அல்லது வைசியத் தொழிலை யநுசரிக்கின்ற பிராஹ்மணர்களையே குறிப்பிடுகின்றது. ஆனால், கூர்ஜர தேசத்திலே இந்தக் காலத்திலே அத்தகைய வித்தியாசங்கள் நெடுநாட்களுக்கு இராவென்று தோ

ன்றுகிறது. "நாகர பிராஹ்மணர்" களுடைய புத்திரர்களும் இக்காலத்திலே ஆங்கிலக் கல்வி கற்றுக்கொண்டு அரசாங்க உதகியோகத்தில் நுழைகிறார்கள், அல்லது ஏதேனும் வியாபாரத் தொழிலை எடுத்துக்கொள்கிறார்கள். பழய முறையை யநுஷ்டிக்கும் வைதிக பண்டிதர்களும் பணக்கஷ்டம் மிகுந்து ஆங்கிலக் கலாசாலைகளைச் சேர்ந்த கல்லூரிகளுக்குத் தங்கள் புத்திரர்களை யனுப்புகிறார்கள், அல்லது, வைத்தியர்கள், காயஸ்தர்கள், மற்றப் பிராஹ்மணரல்லாத ஜாதியார் இவர்களுடைய தொழில்களை யனுசரிக்கும்படி செய்கிறார்கள். விஷயங்களின் போக்கு இம்மாதிரியே நடைபெற்றுக்கொண்டு போகுமானால், இந்திய பூமியிலே வைதீக வகுப்பார் இன்னும் எத்தனை நாட்களுக்கு இருப்பார்கள்— என்பது மிகமிகத் தீர்க்கமாக ஆலோசிக்கப்பட வேண்டிய கேள்வி யென்பதில் சந்தேகமே யில்லை. வைதிக வகுப்பாரின் உயர்வைக் கீழே தொண்டுவர முயற்சிப்பதாக அந்த வைதிக வகுப்பார்மீது தவிர வேறெவர்மீதும் அல்லது வேறு எக்கூட்டத்தவர்மீதும் குற்றம் சுமத்துபவர்கள், பிரகிருதியின் நீக்கமுடியாத நியதிக்குக் கீழ்ப்படிந்து பிராஹ்மண ஜாதியானது தனது சொந்தக் கைகளினாலே தனக்குச் சொந்த சமாதிக் கட்டிடத்தைக் கட்டிக்கொண்டு வருகிறது என்பதை யறிந்து கொள்ள வேண்டும்; நடைபெறவேண்டியதும் இதுதான் உயர்பிறப்பையும் பிரத்தியேக உரிமைகளையும் உடைய ஒவ்வொரு ஜாதியும் தன் கைகளினாலேயே தன்னைத் தகிப்பதற்குள்ள அக்கினியை வளர்த்துக்கொள்ளுதலைத் தனது முக்கியமான கடமையாகச் செய்து கொள்ளுதல் நல்லதும் தகுந்ததுமேயாம்.

சக்தியைச் சேர்த்துவைத்தல் அதைப் பரப்பிவிடுதலைப் போன்று அவ்வளவு அவசியமானதேயாம்; சொல்லப்போனால் இன்னும் அதிக அவசியமானதேயாம் ஹிருதயத்திலே ரத்தத்தின் சேர்க்கை ஜீவிதத்துக்கு அத்தியாவசியமானதோர் நிலைமையாகும்,—சரீரம் முழுதும் அது ஓடாவிட்டால், அது மரணமேயாம் சமுதாயத்தின் நன்மையை உத்தேசித்துச் சில காலங்களிலே வேறெவருக்குமில்லாத அறிவு, சக்தி எல்லாவற்றையும் சில குடும்பங்களிலே அல்லது ஜாதிகளிலே ஒருமுகப்படுத்தி வைக்கவேண்டியது அத்தியாவசியமாம்; ஆனால், அந்த ஒருமுகப்படுத்தப்பட்ட சக்தியானது பிற்காலத்தில் ஜன சமுதாயம் முழுதிலும் பரந்துவிடும்படி செய்வதற்காகவே அந்தக் காலத்துக்கு ஒன்று சேர்க்கப்படுகிறது. இப்படி வியாபிப்பது நிறுத்தப்படுமானால், அந்தச் சமுதாயத்தின் அழிவு நெருங்கிவிட்டதென்பதற்குச் சந்தேகமேயில்லை.

மறு பக்கத்திலே, அரசன் ஸிம்ஹம்போன்றிருக்கின்றான்; அவனிடத்தில் மிருகேந்திரனுடைய நற்குணங்கள் தீய குணங்கள் இரண்டும் இருக்கின்றன. சமயம் நேரிடுகிறபொழுது தனது ரத்த தாகத்தைத் தணிப்பதற்குப் புல்பூண்டுகளைத் தின்று ஜீவிக்கின்ற ஏழைப் பிராணிகளின் ஹிருதயத்தைத் துண்டு துண்டாக்குவதிலே அதனுடைய கொடூரமான நகங்கள் ஒருபொழுதும் பின்வாங்குவதில்லை; ஆனால், கவி கூறுகிறான்,—ஸிம்ஹமானது கிழப்பருவமடைந்து பசியினால் மாணவஸ்தைப் பட்டிருந்தாலும் ஜம்புகத்தைப் போல் தன்னிடம் வருகின்ற மிகமிகப் பலஹீனமான நரியை ஒருபொழுதும்

சொல்கிறதில்லை. குடி ஜனங்கள் ஒரு நிமிஷ நேரத்துக்கு ராஜ ஸிம்ஹத்தினுடைய இந்திரியாநுபவ திருப்தியின் வழியிலே தடைகளாய் நிற்குமானால், அவற்றின் மரண மணி நீக்க முடியாதபடி அடித்துவிடப்படும்; அவை அதன் ஆக்ஞைகளுக்கு வணங்கி நடந்தால், மிகவும் பத்திரமாயிருக்கும். அதுமாத்திரமல்ல; பூர்வ காலங்களைப்பற்றிப் பேசவேண்டியதில்லை; தற்காலத்திலேகூட, அநேகருடைய நன்மைக்காகத் தனிப்பட்ட மனுஷ்யனுடைய ஸ்வயநலத் தியாகத்தினுடையவும் எல்லாருடையவும் பொது நன்மைக்காகச் சமுதாயத்தைச் சேர்ந்த ஒவ்வொருவனையும் தூண்டுகின்ற முயற்சி, காரியம் இவற்றினுடைய ஒற்றுமையினுடையவும் பயன் பரிபூர்ணமாக அனுபவத்தில் அறியப்பட்டுள்ள சமுதாயம் எதுவோ எந்தத் தேசத்திலும் காணப்பட முடியாது. ஆகையினால்தான், சமுதாயத்தின் சிருஷ்டிகளேயாயுள்ள அரசர்கள் அவசிய மாகின்றன. மத்திய ஸ்தானங்களாயுள்ள அவர்களிடம் தான் சமுதாயத்தின் சக்திகளெல்லாம் ஒருமுகப்படுத்தப்படுகின்றன; இல்லையேல் அவை கண்டபடி சிதறிப்போகும். அவர்களிடமிருந்து தான் அச்சக்திகள் புறப்பட்டு ராஜீய சரீரம் முழுதும்ஓடி, சமுதாயத்துக்கு உயிர் கொடுக்கின்றன. பிராஹ்மணர்களுடைய ஆதிக்க காலத்திலே, முதலாவது படியில் அறிவடைய வேண்டுமென்ற முதல ஆசையின் எழுச்சியும், பின்னர் அதன் குழந்தைப் பருவத்திலேயுள்ள அந்த ஆசையின் வளர்ச்சியை இடைவிடாமல் பத்திரமாகக் காப்பாற்ற வேண்டியதும் ஏற்பட்டதுபோல,— க்ஷத்திரியர்களுடைய ஆதிக்கத்திலே முதலாவது படியில் இன்பானுபவங்கட்குள்ள ஒரு பலமான ஆசை தோன்றிவிட்

டது; பின்னர் அதைத் திருப்தி செய்துகொள்வதற்கு உபாயங்களாகக் கலைகளும் சாஸ்திரங்களும் கண்டுபிடிக்கப்பட்டு அபிவிருத்தி யடைந்தன. பெருமையின் சிகரத்திலே யிருக்கிற அரசன் தனது கர்வமுள்ள தலையை எளியவர்களின் ஏழைக் குடிசைகளுக்குள்ளே ஒளித்துக்கொள்ள முடியுமா? அல்லது, அவனுடைய குடிகளின் சாதாரண ஆகாரமானது அவனுடைய ராஜபசியை திருப்தியுடன் ஆற்ற முடியுமா?

பூவுலகிலே எவருடனும் ஒப்புவமை யற்ற கம்பீரத்தை யுடையவன், மனுஷ்ய சரீரமாகிற க்ஷேத்திரத்திலே வசிக்கும் தெய்வமேயாவான,—சாதாரண மனிதன் அவனுடைய—அரசனுடைய—சுகபோக வஸ்துக்களைக் கண்ணால் பார்த்தல் கூடப் பெரும் பாவமாம்; எப்பொழுதேனும் அவற்றை யடைய வேண்டுமென்று நினைத்தல் கூடவேகூடாத காரியம் அரசனுடைய சரீரம் மற்ற ஜனங்களுடைய சரீரங்களைப்போன்றதல்ல; சம்சர்க்கத்தினாலே தீட்டுப்படக்கூடாதபடி அது அவ்வளவு பரிசுத்தமானது. சில தேசங்களிலே அது மரணத்தின் ஆக்ஞைக்குள் ஒருபொழுதும் வருவதில்லையென்றுகூட நம்பப்படுகிறது. அதேமாதிரியான சமத்துவ பரிசுத்தத்தன்மையாம் ஒரு ஒளி ராணியைச் சுற்றிலும் ஒளிர்கின்றது; ஆகையால், அவள் சாதாரணப் பொது ஜனங்களுடைய பார்வையிலிருந்து வெகு ஜாக்கிரதையுடன் காக்கப்படுகிறாள், சூர்யன்கூட அவளுடைய அழகைக் கடைக்கண்ணாலேனும் பார்க்கக் கூடாது. ஆகையினால்தான், கூரையிட்ட குடிசைகளுக்குப் பதிலாகப் பிரமாண்டமான அரண்மனைகள் கிளம்பின. தேவலோகத்தி

னின்றும் பொங்கி வந்தது போன்ற அழகிய சங்கீதத்தின் அருமையான சமரச கீதமானது ஏழைக் கூட்டத்தின் குழப்ப சப்தத்தை யடக்கிவிட்டது. மெல்ல மெல்ல, காடான காடுக ளின் இயற்கை யழகுகளுக்கும் சாதாரண குடியானவனுடைய கரடுமுரடான மூரட்டு உடைக்கும் பதிலாக ஆநந்தகரமான தோட்டங்களும் அழகிய நந்தவனங்களும், எழில் மிகுந்தபடி வரிசைகளும், ரம்யமான சித்திரங்களும் வனப்பு மிகுந்த சிற்ப வடிவங்களும், நேர்த்தியான விலையுயர்ந்த ஆடைகளும் தோன்றி விட்டன. அறிவுள்ள புருஷர்களில் ஆயிரக்கணக்கானவர்கள் ஏர் பிடித்து உழும் குடியானவனுடைய, பாடுமிகுந்த தொழிலை விட்டுவிட்டு, அவ்வளவு சிரமமில்லாததும் சுலபமானதுமான வழிகளிலே தங்களுடைய புத்தியை சூட்சுமமாக உபயோகப் படுத்தக்கூடிய சித்திர வேலைப்பாடுகளாம் புதிய களத்தை நோக்கித் தங்கள் கவனத்தைச் செலுத்தினார்கள். கிராமங்கள் தங்களுடைய பிராதான்யத்தை யிழந்துவிட்டன,— அவற் றுக்குப் பதிலாக நகரங்கள் கிளம்பின.

இன்னும், இந்தியாவிலேதான் அரசர்கள் தாங்கள் பரி பூர்ணமாகத் திருப்தியடையும் பர்யந்தம் பூவுலக சுகங்களைக் கொஞ்சக்காலம் அனுபவித்த பின்னர், அளவுக்கு மிஞ்சி ஐம் புலன்களைத் திருப்தி செய்வதினால் நிச்சயமாக ஏற்படக்கூடிய, மிகுந்த உலகக் களைப்பினாலே, தங்கள் வாழ்க்கையின் கடை சிக் காலத்தில்' பிடிக்கப்பட்டவர்க ளானார்கள். இவ்விதமாக, அவர்கள் உலக சுகங்களிலே திருப்தி யடைந்தவர்களாகித், தங்களுடைய விருத்தாப்பிய காலத்தில் தனிப்பட்ட வனங்

களிலே ஏகாந்த வாசம் செய்வார்கள். அங்கே அவர்கள் ஜீவிதத்தின் ஆழ்ந்த கேள்விகளைப்பற்றிச் சிந்தனை செய்யத் தொடங்கினார்கள். அத்தகைய தியாகத்தினுடையவும் ஆழ்ந்த தியானத்தினுடையவும் பலன்கள் சிக்கலான சடங்குகளிடத்திலும் கிரியைகளிடத்திலும் ஏற்பட்ட பலமான வெறுப்பினாலும், உபநிஷத்துக்களிலும் - கீதையிலும் - சமண சாஸ்திரங்களிலும்-பௌத்த சாஸ்திரங்களிலும் அடங்கிக் கிடக்கும் மிகமிக உத்கிருஷ்டமான ஆத்மீக உண்மைகளிடத்து ஏற்பட்ட அத்தியந்த பக்தியினாலும் குறிக்கப்பட்டன. இங்கும் வைதிக சக்திக்கும் ராஜ சக்திக்கும் ஒரு பெரும் போராட்டம் ஏற்பட்டது. ஆடம்பரமான சடங்குகளும் கிரியைகளும் மறைந்துவிடவே, வைதிகனுடைய தொழிலுக்கு மரண அடி கொடுத்ததுபோ லாயிற்று. ஆகையால், எல்லாக் காலங்களிலும் ஒவ்வொரு தேசத்திலும் வைதீகர்கள் கச்சை கட்டிக்கொண்டு, பூர்வீக வழக்கங்களையும் பழக்கங்களையும் காப்பாற்றுவதற்குத் தங்களா லானமட்டு முயற்சிப்பது இயற்கையே. மறு பக்கத்திலே நேர் எதிராக ஜனகர் போன்ற அரசர்கள் க்ஷத்திரிய பராக்கிரமத்தாலும் ஆத்மீக சக்தியாலும் ஆதரிக்கப்பட்டு நிற்கிறார்கள். இரண்டு கட்சிகளுக்கும் உள்ள இந்தப் போராட்டத்தைப் பற்றி நாம் முன்னமேயே பேசிவிட்டோம். தானாகிய ஒரு பொது மத்தியஸ்தானத்திலே வைதீகன் எல்லா அறிவையும் சேர்த்துக் கொள்வதில் சுறுசுறுப்பா யிருப்பது போல, அரசனும் பூலோக சக்திக ளெல்லாவற்றையும் சேர்த்துத் தானாகிய ஒரு மத்திய ஸ்தானத்திலே ஒற்றுமைப்படுத்தி வைத்துக் கொள்வதில் சுறுசுறுப்பா யிருக்கிறான். இருவரும் சமூ

தாயத்துக்கு நன்மை பயப்பவர்கள் என்பது உண்மைதான். ஒருகாலத்தி லில்லாவிட்டால் இன்னொரு காலத்தில் ஜன சமுதாயத்தின் பொது நன்மைக்கு இருவரும் அவசியமானவர்களே, ஆனால், அந்த ஆவசியகம் குழந்தைப்பருவத்திலேதான். ஆனால், ஜன சமுதாயமானது குழந்தைப் பருவத்தைக் கடந்து பலமுள்ள வாலிபநிலைமையை அடைந்துவிட்டபொழுது, குழந்தைப் பருவத்திலே அதற்குத் தகுந்ததாயிருந்த சட்டையைப் பலாத்காரமாக அதற்கு உடுத்தி, அதை நெருங்கிய எல்லைகளுக்குள் கட்டுப்படுத்த முயற்சிகள் செய்யப்பட்டால் அப்பொழுது அது தன்னுடைய பலத்தினாலே கட்டுக்களை யுடைத்து உதறிவிட்டு மேலே செல்ல முயற்சிக்கிறது, அல்லது அப்படிச் செய்யத் தவறிவிட்டால் அது தனது காலடிகளைப் பின்னுக்கு வாங்கி, மெல்ல மெல்லத் தனது ஆதி அநாகரிக நிலைமைக்குத் திரும்பிவிடுகிறது.

அரசர்கள் குடிகளுக்குப் பெற்றோர்கள் போன்றவர்கள்; குடிகள் அரசனுடைய குழந்தைகள். குடிகள் எல்லா விஷயங்களிலும் அரசனையே எதிர்பார்த்து, அத்தியந்த கீழ்ப்படிதலுடனே அரசனைப் பற்றிக் கொள்ளவேண்டும். அரசனும் அவர்களைப் பக்ஷபாதமில்லாத நீதியுடனே பரிபாலனம் செய்து அவர்களுடைய க்ஷேமத்தையே நோக்கமாகக் கொண்டு தன்னுடைய சொந்தக் குழந்தைகளிடத்துப் போல அவர்களிடத்து பிரீதி செலுத்த வேண்டும். ஆனால், எந்த விதி தனிப்பட்ட வீடுகளுக்குப் பொருந்துகிறதோ அதுவே ஜன சமுதாயத்துக்கும் பொருத்தமாம்; ஏனெனில், ஜன சமுதாயமானது தனிப்பட்ட

வீடுகளின் சேர்க்கையேயாம். "புத்திரன் பதினறு வயது அடைந்துவிட்டால், பிதா அவனைத் தனக்கு நண்பனுகவும் சரி சமானமாகவும் நடத்தவேண்டும்;" இது விதியானல், பால்ய ஜன சமுதாயமானது எப்பொழுதேனும் அந்தப் பதினறுவது வயதை யடைகின்றதா? அரசாங்கத்துக்கும் பொது ஜனங்களுக்கும் பலமான போராட்டம் ஏற்படுகின்ற ஒருகாலத்திலே ஒவ்வொரு சமுதாயமும் மனுஷ்யத்தன்மையை அடைகின்றது என்பது சரித்திர சாட்சியமாம். ஜன சமுதாயத்தினுடைய வளர்ச்சியும் வியாபகத்துவமும் நாகரிகமும் இந்தப் போராட்டத்திலே அதற்கு ஏற்படுகின்றஜயத்தையோ அல்லது தோல்வியையோ பொறுத்திருக்கிறது. சமுதாயத்தைப் புரட்டுகின்ற அத்தகைய மாறுதல்கள் இந்தியாவில் மறுபடியும் மறுபடியும் நேர்ந்து கொண்டுதான் இருக்கின்றன; இந்தத் தேசத்திலே அவை மதத்தின் பெயரால் நடைபெறுகின்றன, அவ்வளவுதான். ஏனெனில். மதமே இந்தியாவினுடைய ஜீவிதமாகும்; மதமே இந்தத் தேசத்தினுடைய பாஷையாம்; அதன் சலனங்கள் எல்லாவற்றினுடையவும் அறிகுறியாம். சார்வாகர்கள், சமணர்கள், பௌத்தர்கள், சங்கரர், ராமாநுஜர், கபீர், நானக், சைதந்யர், பிரஹ்மசமாஜம், ஆர்யசமாஜம்,— இவையெல்லாவற்றிலும் இவை போன்ற மற்ற வகுப்புக்களிலும் மதமாகிற அலையானது நுரைத்துக் கொண்டு, முழங்கிக் கொண்டு, பொங்கிக்கொண்டு உடைத்துக்கொள்கிறது; ஆனல், பின்னணியில் சமுதாயத்தினுடைய குறைகளெல்லாம் நிறைபெற்று வருகின்றன. சில அர்த்தமற்ற ஆசைகளை யுச்சரிப்பதினுல் மாத்திரம் ஆசைகளெல்லாம் பூர்த்தி செய்யப்படு

மானுல், தன்னுடைய ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வ தற்கு எவன் முயன்று கஷ்டங்களை யனுபவிப்பான்? இந்த வியாதியானது எந்தச் சமுதாய அமைப்பினுடையவும் சரீ ரம் முழுதினுள்ளும் நுழைந்துவிட்டால், பின்னர் அந்தச் சமுதாயமானது சோம்பர் மிகுந்து, முயற்சி யற்றதாகத் தன் னுடைய அழிவைச் சீக்கிரமாகத் தேடிக்கொள்கிறது. ஆகை யினுல்தான், ஐம்புலன் அநுபவங்களின் உண்மையையே நம்பி அதற்கு அப்பால் எதையும் நம்பாதவர்களாகிய சார்வா கர்களின் அசங்கிய பரிகாசத்துக்கு இடம் உண்டாயிற்று. ஜன சமுதாயத்திலிருந்து உயிரையே நசுக்கிவிடும்படியான, மிருகவதை முதலிய யாகங்களுடன் கூடிய சடங்குக் கிரியைக ளாம் பெரிய சுமையிலிருந்து, தனிப்பட சுத்தமான ஒழுக்கங் களையும் தத்துவ உண்மைகளையும் தனக்குப் பலமான ஆதார மாகக் கொண்ட சமணர்களுடைய புரட்சி யன்றியில் வேறெது தான் இந்திய சமுதாயத்தை ரக்ஷித்திருக்க முடியும்?—அல் லது பௌத்தர்களுடைய புரட்சி யில்லாவிட்டால், லக்ஷக் கணக்காகத் துன்புறுகின்ற தாழ்ந்த ஜாதியார்களைச் செல்வாக் குள்ள உயர்ந்த ஜாதியார்களின் கடுமையான கொடுங்கோன் மையிலிருந்து எது ரக்ஷித்திருக்கக்கூடும்? காலகதியிலே பௌத்தமதமானது க்ஷீணித்து அதினுடைய அதி பரிசுத்த சன்மார்க்கத்துக்குப் பதிலாக அதிகெட்ட, அசுத்தமான, அயோக்கிய வழிகள் ஏற்பட்டபொழுது, பௌத்த மதத்தி னுடைய சர்வ சமரச சமத்துவத் தன்மையின் விசேஷத்தி னுலே பௌத்த மதத்திலே எடுத்துக்கொள்ளப்பட்ட காட்டு மிராண்டிகளின் பல்வேறு வகுப்புக்களுடைய நாக நர்த்தனத்

திலே இந்திய சமுதாயமானது நடுநடுங்கிய பொழுது,—சங்கரரும், பின்னர் இராமானுஜரும் தோன்றிச் சமுதாயத்துக்கு அதன் பெருமையைத் திருப்பி யளித்து, அது இழந்துவிட்ட அந்தஸ்தை மறுபடியும் ஏற்படுத்திக் கொடுப்பதற்குத் தங்களா லானமட்டும் முயற்சித்தார்கள். இன்னும், முகம்மதியர்களுடைய காலத்திலே கபீர் - நானக் - சைதந்யர் இவர்களும், நமது காலத்தில் பிரஹ்ம சமாஜ ஸ்தாபனமும் - ஆர்ய சமாஜமும் தோன்றி யிராவிட்டால், இதற்குள்ளாக இந்தியாவில், முகம்மதியர்களும் கிறிஸ்தவர்களும் இக்காலத்து ஹிந்துக்களின் தொகையைப் பார்க்கிலும் அதிகரித்திருப்பார்கள்.

பலவித வகைகளாலாய சரீரத்தைக் கட்டுவதற்குச் சக்தியுள்ள ஆகாரத்தையும் எண்ணற்ற நினைப்பு அலைகளை யனுப்பிக் கொண்டிருக்கின்ற மனத்தையும் பார்க்கிலும் சிறந்த பொருள் எது உள்ளது? ஆனால், சரீரத்தைப் பரிபாலித்து, மனத்தைப் பலப்படுத்தச் செல்கின்ற அந்த ஆகாரமானது சரியாகச் சேர்த்துக் கொள்ளப்படாமல், சரீரத்தினுடைய இயற்கையான தொழில்களும் சரியாக வேலை செய்யாவிட்டால், அப்பொழுது அந்தப் பொருளே தீமை யெல்லாவற்றுக்கும் வேராய்விடுகிறது.

வியஷ்டியின் வாழ்க்கை, சமஷ்டியின் வாழ்க்கையிலுள்ளது; வியஷ்டியின் சுகம், சமஷ்டியின் சுகத்தி லுள்ளது; சமஷ்டியினின்றும் பிரித்து வியஷ்டியை நினைக்கவும் முடியாது; இது ஒரு நித்திய உண்மை, ஜகத் கட்டப்பட்டிருக்கும் அஸ்தி

வாரப் பாறையுமாம். சமஷ்டியினிடத்து இடைவிடாத அனு தாப உணர்ச்சியும் ஒற்றுமையும் கொண்டு, அது சுக மடையும் பொழுது சுகமடைந்து, அது துன்புறும் பொழுது துன்புற்று, முடிவற்ற அந்த சமஷ்டியை நோக்கி, மெல்ல மெல்லச் செல்லுதல் ஒன்றே வியஷ்டியினுடைய கடமை. அது அவனுடைய கடமை மாத்திரமன்று; அதை மீறினல் அவனுக்கு மரண முண்டாகும்; ஆனல், இப் பெரு உண்மையின்படி நடந்தால், அமிருத வாழ்க்கை யுண்டாகும். இது பிரகிருதியின் நியதி; அதனுடைய சதா ஜாக்கிரதையுள்ள கண்களிலே எவரால் மண்ணைப் போட முடியும்? எவரும் ஜன சமுதாயத்தை யேமாற்றி, நெடுநாட்கள் மோசம் செய்துகொண்டிருக்க முடியாது. சமுதாயத்தின் மேற் பரப்பிலே எவ்வளவுதான் குப்பையும் மண்ணும் குவிந்திருந்த பொழுதிலும், அக் குவியல்களி னடியில், ஜீவித சுவாசமானது சர்வ சமத்துவ அன்புச் சலனங்களோடும் எல்லோரிடத்தும் தன்னல மறுப்புடன் கூடிய தயையுடனும் துடித்துக்கொண்டு காணப்படுகிறது. சமுதாயமானது அடிக்கடி நேரிடும் தொந்தரவுகளை யெல்லாம் பொறுமையுடன் பொறுக்கின்ற பூமியைப் போன்றது; ஆனல், அது என்றேனும் ஒருநாள்—அந்த நாள் எவ்வளவு காலம் கழித்து வந்தாலும் சரியே,—விழித்துக்கொண்டு விடுகிறது; அப்படி விழிக்கும் பொழுது உண்டாகின்ற அசைவினல் ஏற்படுகின்ற பயங்கர சக்தியானது, பொறுமையுடன், மௌனமாக எத்தனையோ லக்ஷம் வருஷங்களாகக் குவித்து வைக்கப்பட்டதும் ஸ்வய நலம் தேடும் இழிவு

மாகிய அழுக்குக் குவியலே வெகுதூரம் அடித்து எறிந்து விடுகிறது.

நாம் இவ்வழகிய உண்மையை மறந்துவிடுகிறோம்; நம்முடைய முடத்தனத்தினால் நாம் ஓராயிரம் தடவை கஷ்டமுற்ற பொழுதிலும், நாம் நமது முழு மூடத்தனத்திலே ஆழ்ந்து, நம்முள் உள்ள மிருகத்தினால் தூண்டப்பட்டு, நாம் அதை நம்புகிறதில்லை. நாம் மோசம் பண்ண முயற்சிக்கிறோம்;ஆனால் நாமே மோசம் போனவர்களாக ஆயிரம் தடவை கண்டு கொள்ளுகிறோம்; ஆயினும், நாம் சும்மா யிருப்பதில்லை. நாம் பித்துப் பிடித்துப் போய்ப், பிரகிருதிபோல் நாம் பாவித்துக் கொள்ள முடியுமென்று நினைக்கிறோம். ஸ்வய நலத்துக்காகப் பாடுபடுதலே ஜீவிதத்தினுடைய சர்வ முடிவு என்று நாம் நமது குறுகிய திருஷ்டியினால் நினைத்துக் கொள்ளுகிறோம்.

ஞானம், அறிவு, ஐச்வர்யம், மனிதர்கள், பலம், பராக்கிரமம், இன்னும் பிரகிருதி சேர்த்து நம்மில் சேகரித்து வைக்கின்றன எல்லாம் அவசியம் நேரிடுகிற பொழுது, வியாபகம் செய்வதற்கேயாம்; நாம் அடிக்கடி இந்த உண்மையை மறந்துவிட்டு, ஒப்புவிக்கப்பட்டிருக்கும் அந்தச் சொத்துக்களின் மீது "எனது தான்" என்னும் முத்திரையைப் போட்டுவிடுகிறோம்; இவ்விதமாக, நம்முடைய அழிவுக்கு நாமே விதை விதைத்துக்கொள்கிறோம்!

குடிகளின் சேர்க்கையினுலாய சக்திகளின் மத்திய ஸ்தான மாகிய அரசன் அந்தச் சக்திகள் சமுதாயத்தி னுடைய நன்மைக்குச் சமுதாயம் முழுதும் பரவும் பொருட்டு, அவன் அவற்றை யதிகரித்து மறை ந்து கிடக்கும் பான்மையில் ஆயிரம் மடங்கு அதிகமாகத் திருப்பிக் கொடுப்பதற்காகவே அவனிடத்தில் சேர்த்து வைக் கப்பட் டிருக்கின்றன வென்பதைச் சீக்கிரம் மறந்துவிடு கிருன். அவர் தெய்வத் தன்மை யெல்லாம் தன்னுடையதே யென்று சொல்லிக்கொண்டு, கர்வம் மிகுந்து, வேணன் என் னும் அரசனைப் போல, மற்ற ஜனங்கள் தன் முன்னே கை கட்டி நிற்கவேண்டியவர்க ளென்றும், மனுஷ்ய வர்க்கத்தின் இழிந்த மாதிரிக ளென்றும் நினைக்கிருன்; அவனுடைய ஆக் ஞைக்கு விரோதமானது எதானுலும் சரி, நல்லதானுலும் சரி, கெட்டதானுலும்சரி, அவனுடையகுடிகள் செய்கின்ற ஒரு பெ ரும்பாபமாய் விடும். ஆகையினுல், ரக்ஷைக்குப்பதிலாக அடக்கு முறை ஏற்படுகின்றது; காப்பாற்றப்படுவதற்குப் பதிலாக அவர்களுடைய ரத்தம் உறிஞ்சப்படுகிறது. சமுதாயமானது சக்தி யற்றதாயும் பலஹீனமானதாயு மிருந்தால், அரசன் செய்கின்ற கொடுமைகளை யெல்லாம் அது பொறுமையுடன் ஏற்றுக் கஷ்டப்படுகிறது; அதன் இயற்கைப் பலன் யாதெ னில், அரசனும் அவனுடைய குடிகளும் கீழே கீழே விழுந்து, மிக மிக இழிவான நிலைமையை அடைந்து, இவ்விதமாகத் தங்கள் ஜன சமுகத்தைப்பார்க்கிலும் அதிக பலமுள்ள எந்த ஜன சமுகத்துக்கும் சுலபமான இரையாகிவிடுகிருர்கள். ஜன சமுதாயம் ஆரோக்கிய முள்ளதாயும் பல முள்ளதாயும் இருந்

தால், அரசனுக்கும் அவனுடைய குடிகளுக்கும் சீக்கிரத்தி லே பயங்கரமான ஒரு யுத்தம் ஏற்பட்டுவிடுகிறது. அதன் எதிர்ச் செய்கையினாலும் துடிதுடிப்பினாலும் செங்கோலும் கிரீடமும் தூர எறியப்பட்டு விடுகின்றது; ஸிம்ஹாசனமும் ராஜ ஆடம்பரங்களும் காட்சிச் சாலைகளிலே வைக்கப்பட்டுள்ள பழய காலத்து விநோதப் பொருள்கள் போல் ஆய்விடுகின் றன.

இந்தப் போராட்டத்தின் பலனாக, அவன் எதிர்ச் செய் கையாக வைசிய மகா சக்தி தோன்றி யிருக்கின்றது; அத னுடைய கோபப்பார்வையிலே முடி தரித்த தலைவர்கள், வீரர்க ளின் அதிபதிகள் சிம்ஹாசனங்களிலே யிருந்தாலும், பஞ்சு படும் பாடுபட்டு நடுங்குகின்றார்கள். அதை எளியவனும் தனவந்தனும் தன் கையிலே தங்கக்குடம் வந்துவிடுமென்று வீணே எதிர்பார்த்து, விநயத்துடன் பின் தொடர்கின்றான்; அதுவோ டான்டலஸினுடைய பழம்போல எப்பொழுதும் பிடி யினின்றும் நழுவிப்போய்விடுகிறது.

பிராஹ்மணன் சொன்னான்: "சக்திக ளெல்லாவற்றுக்கும் பெரிய சக்தி வித்யா சக்தியாம்; அந்த வித்தை என்னைச் சார்ந் திருக்கிறது; அந்த வித்தை என்னிடம் இருக்கிறது; ஆகை யால், ஜன சமுதாயம் என் சொற்படி நடக்கவேண்டும்." கொஞ்ச நாட்களுக்கு அப்படித்தான் இருந்தது. க்ஷத்திரி யன் சொன்னான்: "ஏ, பிராஹ்மணா! என்னுடைய கத்தியின் சக்தி யில்லாவிட்டால், உனக்கு வித்யா சக்தி யெல்லாம்

இருந்துதான் என்ன? நீ எங்கிருந்திருப்பாய்? நீ பூமியிலிரு ந்து சீக்கிரத்திலே அழிக்கப்பட்டிருப்பாய்; உயர்ந்தவன் நானே.'' உறையிலிருந்து நெருப்பைக் கக்குகின்ற கத்தி வெளியே குதித்தது,—ஜன சமுதாயமானது தலை குனிந்து அதை வணக்கத்துடன் ஏற்றுக்கொண்டது. வித்தையைப் பூஜித்துவந்தவன் கூட முதலில் அரசனைப் பூஜிப்பவனாகி விட்டான். வைசியன் கூறிக்கொண்டிருக்கிறான்: "ஏ, வைத்யக்காரர்களே! ஜோதியான சர்வ வியாபக தேவதை யென்று நீங்கள் எதை அழைக்கின்றீர்களோ அது என்னுடைய கையில் இருக்கிறது,என்றும் பிரகாசமுள்ளதங்கம், சர்வசக்தி வாய்ந்த பொன். இதோ, அதனுடைய கிருபையினால், நானும் சமத்துவமாகச் சர்வ சக்தி வாய்ந்தவனா யிருக்கிறேன். ஏ, பிராஹ்மணா! இப்பொழுது கூட, அதனுடைய கிருபையினால் உனது ஞானம், வித்தை, ஜபங்கள், தியானம் எல்லாவற்றையும் நான் விலைக்கு வாங்கிவிடுவேன், ஏ, பெரிய அரசனே! எனது தங்கமாகிற இதன் கிருபையினால் எனது ஆசை நோக்கங்களை நான் பூர்த்தி செய்துகொள்ளும் பொருட்டு உனது கத்தி, ஆயுதங்கள், வல்லமை, பராக்கிரமம் இவை சீக்கிரம் உபயோகப்படுத்தப்படும். அந்தப் பெரிய, விஸ்தாரமான யந்திரசாலைகளைப் பார்த்திருக்கிறாயா? அவை தாம் எனது கூண்டுகள். சூத்ரர்களாகிற லக்ஷக்கணக்கான தேனீக்கூட்டங்கள் எப்படி அந்தக் கூண்டுகளிலிருந்து இடை விடாது தேனைச் சேர்த்துக்கொள்கின்றன, பார்; யாருக்காக என்று தெரியுமா? எனக்காகத்தான்,—பின் புறத்தேயிருந்துகொண்டு அதன் ஒவ்வொரு துளியையும் எனது சொந்த உபயோகத்தையும்

லாபத்தையும் உத்தேசித்துக் காலக்கிரமத்திலே யுறிஞ்சிவிடு கின்ற இந்த எனக்காகத்தான்."

பிராஹ்மணனுடையவும் க்ஷத்திரியனுடையவும் ஆதிக்க காலத்திலே வித்தையின் சேர்க்கையும் நாகரிகத்தின் அபி விருத்தியும் இருந்ததுபோல, வைசியன் ஆதிக்கமடைந்ததின் பலன் யாதெனில், ஐச்வர்யம் குவிதலாம். எந்த நாணயத்தி னுடைய சப்தத்தின் மாயா சக்தி நான்கு ஜாதியார்களுடைய வும் மனத்திலே தவிர்க்கமுடியாத ஒரு வசிகரத் தன்மையுட னே வேலை செய்கின்றதோ அந்த நாணயத்தின் உடைமை யிலேயே வைசியனுடைய சக்தி யிருக்கிறது. வைசி யன் தன்னுடைய ஒரே உடைமையாகிற இதைப் பிராஹ் மணன் எங்கே ஏமாற்றி யெடுத்துக்கொண்டு விடுவானோவென் றும், க்ஷத்திரியன் தனக்குள்ள மிகுந்த ஆயுத பலத்தினுல் எங்கே பிடுங்கிக்கொண்டுவிடுவானோவென்றும், எப்பொழுதும் பயப்பட்டுக்கொண்டிருக்கிறுன். தற்காப்பின் நிமித்தம் வைசி யர்கள், ஆகையினுல், எல்லோரும் ஒரே மனமுடையவர்களா யிருக்கிறுர்கள். வைசியன் பணத்தை இஷ்டம்போலக் கையாள் கிறுன்; அதைப் பிறர் உபயோகப்படுத்திக்கொள்வதற்காகக், கையில் பிரம்புடனே நின்று பிடுங்குவதுபோல, அவன் பிடு ங்குகின்ற கொடூரமான வட்டியே எல்லாருடைய ஹிருதயத்தி லும் நடுக்கத்தை யுண்டுபண்ணுகின்ற, சக்தி மிகுந்த ஆயுத மாயிருக்கின்றது. பணத்தின் சக்தியினுல், அவன் ராஜசக்தி யை அடக்குவதிலே எப்பொழுதும் சுறுசுறுப்பாயிருக்கிறுன். தனது ஐச்வர்யப் பெருக்கத்தின் குறுக்கே ராஜ சக்தி எப்படி

யும் நிற்காதபடி, வியாபாரி எப்பொழுதும் ஜாக்கிரதையாயிருக்கிறான். ஆனால், அரச வகுப்பாரிடமிருந்து சூத்ர வகுப்பாருக்குச் சக்தி போகவேண்டுமென்பதில் அவனுக்கு அணுவளவும் விருப்பம் கிடையாது.

வியாபாரி எந்தத் தேசத்துக்குப் போகிறதில்லை. தான் அறிவீனனாயிருந்தபொழுதிலும் அவன் தனது வியாபாரத்தை நடத்திக்கொண்டு ஒரு தேசத்தினுடைய வித்தை, ஞானம், கலை, சாஸ்திரம் இவற்றை இன்னொரு தேசத்திலே கொண்டு போய் நட்டுவிடுகிறான். பிராஹ்மணனுடையவும் க்ஷத்திரியனுடையவும் ஆதிக்க காலங்களிலே, சமுதாய சரீரமாகிய ஹிருதயத்திலே சேர்த்து வைக்கப்பட்ட ஞானமும் நாகரிகமும் கலைகளும் வைசியனுடைய வெவ்வேறு சந்தையிடங்களுக்கு வியாபாரக் கால்வாய்களின் மூலமாக எல்லாப் பக்கங்களிலும் வியாபிக்கும்படிச் செய்யப்படுகிறது. இந்த வைசியசக்தி கிளம்பியிராவிட்டால், உலகின் ஒரு மூலையிலுள்ள நாகரிகம், வித்தை, சம்பாத்தியங்கள், ஆகாரப் பொருள்கள், ஆடம்பரப் பொருள்கள் இவற்றை இன்னொரு மூலைக்கு இன்று எவர் கொண்டுபோயிருப்பார்?

எவருடைய சரீரப் பிரயாசையின் மூலமாகவே பிராஹ்மணனுடைய செல்வாக்கும், க்ஷத்திரியனுடைய பராக்ரமமும், வைசியனுடைய ஐச்வரியமும் சாத்தியமோ அவர்கள் எங்கே? எவர் சமுதாயத்தின் உண்மையான சரீரமாயிருந்தும் எல்லாக் காலங்களிலும் எல்லாத் தேசங்களிலும் "இழிபிறப்பாளர்"

என்று கூறப்படுகின்றனரோ அவருடைய சரித்திரம் என்ன? அவர்களுக்கு அன்புள்ள இந்தியாவானது "அவனுடைய நாக்கை யறு, அவனுடைய சதையைச் செதுக்கு" என்ற சாந்தமான தண்டனைகளையும் அதே மாதிரியான மற்றவற்றையும் விதித்தது எதற்காகவென்றால், உயர்ந்த வகுப்பாரால் உரிமை செய்யப்பட்டிருந்த அறிவிலும் ஞானத்திலும் ஒரு பங்கை யடைய முயற்சித்தால், அந்த முயற்சியாம் பெருங் குற்றத்துக்கு,—இந்தியாவின் அந்த "நடைபிணங்கள்," இதர தேசங்களிலுள்ள 'சுமை தூக்கி மிருகங்கள்,"—சூத்ரர்கள்,—வாழ்க்கையிலே அவர்களுடைய கதி யென்ன? இந்தியாவைப்பற்றி நான் என்ன சொல்வேன்? சூத்ர ஜாதியாரை விட்டுவிடுவோம்,—சாஸ்திர ஞான சம்பாத்தியத்தை யுடையவர்களாயிருந்த அதன் பிராஹ்மணர்கள் இப்பொழுது அந்நிய நாட்டு மேதாவிகளா யிருக்கிறார்கள், அதன் க்ஷத்திரியர்கள் ஆட்சி புரியும் ஆங்கிலேயர்களா யிருக்கிறார்கள்; வைசியர்கள் எலும்பிலும் சதையிலும் வியாபார வாசனையுடைய ஆங்கிலேயர்களேயா யிருக்கிறார்கள்; ஆகையால், சூத்திரத்தன்மையொன்றே,—சுமை தூக்கி மிருகத்தன்மை இப்பொழுது இந்தியர்களுக்கே விடப்பட்டிருக்கிறது. இப்பொழுது, ஊடுருவிப் பார்க்கமுடியாத அந்தகார மேகம் ஒன்று நம்மெல்லோரையும் சூழ்ந்திருக்கிறது. இப்பொழுது, காரியத்தில் உறுதியு மில்லை, முயற்சியில் துணிவு மில்லை, ஹிருதயத்தில் தைரியமு மில்லை, மனத்தில் பலமு மில்லை. பிறர் நடத்தும் இழிநடத்தையில் வெறுப்பு மில்லை, அடிமைத்தனத்தில் அப்பிரியமும் இல்லை, ஹிருதயத்தில் அன்புமில்லை, நம்பிக்கையு மில்லை, ஆண்மையு

யில்லை; ஆனால், இந்தியாவில் நம்மிடம் இருப்பது யாதெனில், ஆழ்ந்து வேரூன்றிய பொறாமையும், ஒருவரிடம் மற்றவர் காண்பிக்கும் பலமான விரோதத் தன்மையுமேயாம்; பலஹீனர்களை எந்தத் தந்திரமும் செய்து அழித்துவிடுவதற்குள்ள வியாதிபிடித்த ஆசை, நாய்போன்று பலசாலிகளுடைய பாதங்களை நக்குவதில் பிரியம். இப்பொழுது, மிகமிக விசேஷ திருப்தி எதனால் உண்டாகின்றதென்றால், ஐச்வர்யத்தையும் அதிகாரத்தையும் காண்பித்தலினால், தன்னலத் திருப்தியில் சிரத்தை கொள்வதினால், அழியும் தன்மையனவாய பொருள்களைச் சேர்த்துக் குவித்துக்கொள்வதில் காண்பிக்கும் ஞானத்தினால், பயங்கரமான பைசாச வழக்கங்களிலே யப்பிய சிக்கின்ற யோகத்தினால், பிறரை யடிமைப்படுத்துகின்ற வேலையினால், அந்நிய ஜனசமூகத்தாரைப்போல இழிந்தபாவனைகாட்டிக்கொள்ளும் நாகரிகம் - நிந்தித பாஷையை உபயோகிப்பதில் வாசாலகம் - தனவந்தர்களை யளவுக்கு மிஞ்சி முகஸ்துதி செய்கின்ற புத்தகங்களில் மதிப்பு இவற்றால், அல்லது பைசாச அசங்கியங்களை வியாபகப்படுத்துவதில்! ஜனத்தொகை முழுதுமே உண்மையில் சூத்திரனுடைய சமத்துவத்துக்கு வந்திருக்கின்ற ஒரு தேசத்தினுடைய பிரத்தியேக சூத்திர ஜாதியைப் பற்றி மாத்திரம் தனியே என்ன சொல்வது! இந்தியாவைத் தவிர, மற்றத் தேசங்களிலேயுள்ள சூத்ரர்கள் சிறிது விழித்துக்கொண்டுவிட்டார்கள்போலத் தோன்றுகிறது; ஆனால், அவர்களுக்குத் தகுந்த படிப்பில்லை; அந்த வகுப்பு மனிதர்களுக்குள்ளேயே அந்யோந்யம் விரோதத்தன்மையிருக்கின்றது; இது சூத்ரர்களுக்குப் பொதுவான ஒரு லக்ஷணம். மற்ற வகுப்

பினர்களைவிட அவர்கள் தொகையில் அதிகமாயிருந்தால், அத ஞல் என்ன பிரயோசனம்? லக்ஷம் பெயர்களுடைய பலத்தை உண்டுபண்ணிக்கொள்கின்ற பத்துப்பெயர்களுடைய ஒற்றுமை சூத்ரனிடத்தில் இல்லவே யில்லை. ஆகையினுல்தான், பிரகிருதி நியதியின்படி சூத்ரர்கள் ஆளப்படும் ஜாதியாராகிவிடுகிருர்கள்.

ஆனுல், நம்பிக்கை யிருக்கிறது. காலத்தினுடைய பல மான போக்கிலே, பிராஹ்மணர்களும் இதர உயர்ந்த ஜாதியார்க ளும்கூட சூத்ரர்களுடைய தாழ்ந்த நிலைமைக்கு வந்துவிடு கிருர்கள். சூத்ரர்கள் உயர் பதவிகளுக்கு உயர்த்தப்பட்டுவிடு கிருர்கள். ஒரு காலத்திலே சூத்ரர்களுடையபூமியா யிருந்ததும், ரோமாபுரியினுல் அடிமைப்படுத்தப்பட்டிருந்ததும் ஆன ஐரோப்பா இப்பொழுது க்ஷத்திரிய பராக்ரமத்தினுலே நிரப் பப்பட்டிருக்கிறது. நமது கண்களுக்கு முன்னேயே, அற்பமா யிருந்த ஜப்பான், ஒரு வெடிபாணம் புறப்படுவதுபோலத் திடீ ரென்று புறப்பட்டுத் தனது சூத்ரத்தன்மையை உதறி யெறி ந்துவிட்டு, மெல்ல மெல்ல உயர்ந்த ஜாதியாரின் உரிமைகளின் மீது படையெடுத்துவா, சக்தி மிகுந்திருந்த சீன தேசமானது வெகு வேகமாகச் சூத்ரத்தன்மையை அடைந்து வருகின்றது. இக்காலத்திய க்ரீஸும் இத்தாலியும் க்ஷத்திரியத் தன்மை யடைந்ததும், துருக்கி- ஸ்பெயின் இன்னும் இதர தேசங்கள் க்ஷீணித்ததும்கூட இங்குக் கவனிக்கப்படற் குரியவை.

ஆனுல், அவர்களுடைய சூத்திரத்தன்மையுடனே சூத்ரர் கள் கிளம்பும்படியான ஒருகாலம் வரும்; அதாவது, இப்பொ

மூதா, வைசியனுக்கு அல்லது க்ஷத்திரியனுக்கு லக்ஷணமா யுள்ள குணங்களை யடைந்து சூத்ரர்கள் பெருமைப்படுவது போலன்று; ஆனால், ஒவ்வொரு தேசத்தினுடைய சூத்ரர்களும் தங்களுக்கு இயற்கையாயுள்ள சூத்ரத்தன்மையுடனும் வழக் கங்களுடனும்,—உண்மையில் வைசியனாகவோ அல்லது க்ஷத் திரியனாகவோ ஆகாமல், சூத்ரர்களாகவே யிருந்துகொண்டு,— ஒவ்வொரு சமுதாயத்திலும் பராமாதிக்கத்தை யடையும்படி யான ஒருகாலம் வரும். இப்புதிய சக்தியின் அருணோதயத் தின் முதலாவது ஒளி மேற்கத்திய உலகத்திலே மெல்ல வீசுவ தற்கு முன்னமேயே ஆரம்பித்துவிட்டது. இப் புதிய காட்சி யின் கடைசி முடிவு என்ன ஆகுமோவென்று புத்திசாலிகள் யோசனை செய்துகொண்டிருக்கிறார்கள். ஜன சமுதாய வாதம், கலக வாதம், துஷ்ட ஸம்ஹாரவாதம், இவை போன்ற மற்ற வகுப்புகள், இவை பின்வரப்போகின்ற ஜன சமுதாயப் புரட்சி க்கு முன் படையா யிருக்கின்றன. மனத்துக்கும் எட்டாத காலம் முதல் கடுமையாகவும் நசுக்கப்பட்டும் நடத்தப்பட்டு வந்ததன்பலனாகச், சாதாரணமாக சூத்ரர்கள் ஒன்று உயர்ந்த ஜாதியார்களின் பாதங்களை நாய்போன்று நக்கிக்கொண்டு மிக மிக அடிமைக் குணம் வாய்ந்தவர்களா யிருக்கிறார்கள். இல்லை யேல் மிருகங்கள் போலக் கொடியவர்களா யிருக்கிறார்கள். இன் னும், எல்லாக் காலங்களிலும் அவர்களுடைய நம்பிக்கைகளும் ஆசைகளும் வீணாக்கப்படுகின்றன; ஆகையினால், கார்யத்திலே உறுதியும் செய்கையிலே விடாமுயற்சியும் அவர்களிடம் இல்ல வே யில்லை.

மேனாட்டிலே கல்வி பரவியிருந்தபொழுதிலும், சூத்ர வகுப்பார் உயர்வை யடைவதிலே பெரிய தடையொன்று இருக்கின்றது; அதாவது, ஏறக்குறைய நல்ல அல்ல, தீய குணங்களை யுடைத்தாயிருத்தலினால் தீர்மானிக்கப்படுகின்றபடி ஜாதியை நிர்ணயித்துவிடுதலாம். பூர்வீக காலங்களில் இந்தியாவில் இருந்து வந்ததும் குணத்தை யாதாரமாகக் கொண்டதுமான இந்த ஜாதி முறையினாலேயே, சூத்ர ஜாதி கைகால் கட்டப்பட்டுக் கிடந்தது. முதலாவது, ஐச்வர்யம் சேர்ப்பதற்கு, அல்லது தகுந்த அறிவையும் வித்தையையும் அடைவதற்குச் சூத்ரனுக்குச் சந்தர்ப்பமே கொடுக்கப்படவில்லை. இந்தக் குறை போதாதென்று, சூத்ர ஜாதியிலே அசாதாரண சாமர்த்தியமும் புத்தியு முள்ள ஒருமனிதன் எப்பொழுதேனும் பிறந்துவிட்டால், சமுதாயத்திலே செல்வாக்குள்ள உயர்ந்த வகுப்பினர் அவன் மீது பட்டங்களும் மரியாதைகளும் பொழிந்து,அவனைத் தங்களுடைய கூட்டத்தில் சேரும்படி உயர்த்திக்கொண்டு விடுகிறார்கள். அவனுடைய ஐசுவரியமும் அவனுடைய அறிவின் சக்தியும் ஒரு அந்நிய ஜாதியின் நன்மைக்காக உபயோகப்படுத்தப்பட்டன,—அவனுடைய சொந்த ஜாதி ஜனங்கள் அவனுடையசமர்த்துக்களினால் யாதொரு பயனும் அடையவில்லை; அது மாத்திரமல்ல; உபயோகமற்ற ஜனங்கள்,உயர்ந்த ஜாதியிலேதள்ளுபடியானவர்கள் ஒதுக்கப்பட்டு சூத்ராவகுப்பாரின்தொகை யதிகரிக்கும்படி அந்த வகுப்பிலே தள்ளப்பட்டார்கள்.

சந்தேகப்பட்ட பெற்றோர்களையுடைய வசிஷ்டர், நாரதர், சத்யகாம ஜாபாலர், வியாசர், கிருபர், துரோணர், கர்ணன்

இவர்களும் மற்றவர்களும் தங்களுடைய அதிக வித்தையினு லே, அல்லது பராக்கிரமத்தினுலே பிராஹ்மணனுடைய அல் லது க்ஷத்திரியனுடைய பதவிக்கு உயர்த்தப்பட்டார்கள். ஆனுல், இந்த உயர்த்துதல்களினுலே, வியபசாரி, பணிப்பெண், செம்படவன் அல்லது சாதி வகுப்பு எப்படி நன்மையடைந் தது என்பது இனிமேல்தான் தெரியவேண்டும். இன்னும் பிராஹ்மண ஜாதியிலிருந்து, க்ஷத்திரிய ஜாதியிலிருந்து, அல் லது வைசிய ஜாதியிலிருந்து வீழ்ந்துவிட்டவர்கள் எப்பொழுது சூத்ரர்களுடைய தொகையை அதிகரிப்பதற்கு எப்பொழுதும் கொண்டுவரப்பட்டார்கள்.

இப்பொழுதிய இந்தியாவிலே, சூத்திரப் பெற்றோர்களிட மிருந்து பிறந்த எவனுக்கும், அவன் கோடீஸ்வரனு யிருந் தாலும் சரி, அல்லது பெரிய பண்டிதனு இருந்தாலும் சரி, தனது சமுதாயத்தை விட்டுப் போவதற்கு உரிமை கிடை யாது. பலன் யாதெனில், அவனுடைய ஐச்வர்யம், புத்தி அல்லது அறிவு இவற்றின் சக்தி, அவனுடைய ஜாதி எல்லைக் குள்ளேயே கட்டுப்பட்டுக் கிடத்தலினுல், அவனுடைய வகுப் பாருடைய நன்மைக்காக உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது. இந்தியாவிலே யுள்ள இந்தப் பரம்பரையான ஜாதி முறையா னது தனது சொந்த எல்லைகளைக் கடந்து வெளியே செல்ல முடியாதிருக்கிறதினுலே மெல்ல ஆனுல், நிச்சயமாக அதே கூட்டத்திலிருக்கும் ஜனங்களுடைய க்ஷேமத்துக்கு ஏதுவா யிருக்கிறது. இந்தியாவானது ஜாதி அந்தஸ்து முதலிய பேதம் பாராட்டாமல் குடிகளைப் பாலித்து வருகின்ற ஒரு

அரசாங்கத்தின் கீழ் இருக்கும் வரையில், இங்குள்ள தாழ்ந்த ஜாதிகளின் அபிவிருத்தி இம்மாதிரியே நடைபெற்றுக்கொண்டு போகும்.

சமுதாயத்தினுடைய தலைமைப்பதவி வித்தையைத் தங்களுக்கே சொந்தமாகப் பாவிப்பவர்களுடைய கைகளிலே, அல்லது ஐச்வர்யத்தினுடைய-அல்லது ஆயுதங்களினுடைய சக்தியைக் கையாள்பவர்களுடைய கைகளிலேயிருந்தாலும், அதன் சக்திக்கு உற்பத்தி ஸ்தானம், எப்பொழுதும், அடங்கிக் கிடக்கும் பொது ஜனங்களேயாம். அதிகாரத்திலுள்ள வகுப்பார் எவ்வளவுக் கெவ்வளவு இந்த உற்பத்தியினின்றும் விலகிக் கொள்கிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு அது பலஹீனமடைவது நிச்சயம். ஆனால், எவர்களிடமிருந்து இந்தச் சக்தி நேராகவோ அல்லது நேரல்லாத முறையிலோ, நல்ல வழியாகவோ, அல்லது தீய வழியாகவோ, — ஏமாற்றுதலினாலே, தந்திரத்தினாலே, பலவந்தத்தினாலே அல்லது தானாகக் கொடுக்கும் கொடையினாலே—எடுக்கப்படுகிறதோ அவர்கள் தலைமை வகித்து நடத்தும் வகுப்பினரால் ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளப்படுகிறதேயில்லை; அப்படியிருக்கிறது விதியினுடைய வேடிக்கையான விஷயம்; அப்படியிருக்கிறது மாயையினுடைய விநோத வேலைப்பாடு. காலக்கிரமத்திலே வைதீக சக்தியானது சக்தியின் உண்மை யுற்பத்தி ஸ்தானமான பொது ஜனங்களிடமிருந்து அடியோடு விலகிக்கொண்டு விட்டபொழுது குடிஜனங்களுடைய பலத்தை ஆதாரமாக எடுத்துக்கொண்ட, அப்பொழுதிருந்த ராஜ சக்தியினால் தோற்கடிக்கப்பட்டது. மறு

படியும் ராஜ சக்தியானது தனக்குப் பரிபூர்ண ஸ்வதந்திரம் இருப்பதாக நினைத்துக்கொண்டு தான் அழிந்துபோவதற்கே, அல்லது பொது ஜனங்களுடன் அதிக ஒற்றுமையை உண்டாக்கிக்கொள்வதில் இப்பொழுது ஜயமடைந்துள்ள வைசியர்களின் கைகளிலே ஒரு வெறும் பொம்மையாக இருப்பதற்கே, தனக்கும் குடிஜனங்களுக்கும் இடையே ஒரு பயங்கரமான பிளவையுண்டுபண்ணிக்கொண்டது. வைசியர்கள் இப்பொழுது தங்கள் நோக்கத்தைப் பூர்த்தி செய்துகொண்டுவிட்டார்கள். ஆகையினால், அவர்கள் குடிஜனங்களுடைய உதவியை இப்பொழுது நாடாமல், அவர்களிடமிருந்து பிரிந்து நிற்பதற்கே தங்களாலானமட்டு முயற்சித்துக்கொண்டு வருகிறார்கள்; இதன் பலனாக, இந்தச் சக்தியும் அழிந்துபோவதற்கு விதை விதைக்கப்பட்டு வருகிறது.

குடி ஜனங்கள், தாங்களே சக்திகளெல்லாம் நிரம்பியதொரு பெருந்தொட்டியா யிருந்தாலும், ஒருவரிடமிருந்தொருவர் தூரத்தை யுண்டுபண்ணிக்கொள்வதினாலே, தங்களுடைய நியாயமான உரிமைகளை யெல்லாம் இழந்துநிற்கிறார்கள். இம்மாதிரி சம்பந்தம் நடைபெறுகிறவரையில், அவர்கள் அப்படித்தான் இருப்பார்கள்.

பொதுவான ஒரு அபாயம், அல்லது விரோதத்தை, அல்லது அன்பை யுண்டுபண்ணும்படியான ஒரு பொதுக் காரணம் இதுவே ஜனங்களை யொன்றாகக் கட்டுகின்ற கட்டாம். காட்டு மிருகங்களை யொன்று சேர்க்கின்ற அதே நியதியினால்,

மனிதர்களும் கூட்டமாகச் சேர்ந்து, ஒரு ஜாதியாக அல்லது ஒரு ஜன சமூகமாக ஆகிறார்கள். தன்னுடைய சொந்த ஜனங்களிடத்தும் தேசத்தினிடத்தும் உள்ள அத்தியந்தப் பிரியமானது இன்னொருவர்மீது கடுமையான விரோதம் காண்பித்துக் கொண்டு—க்ரீஸ் பாரசிகத்துக்கு விரோதமானதுபோல, ரோமாபுரி கார்த்தேஜுக்கு விரோதமானதுபோல, அராபியர்கள் காப்பிரிகளுக்கு விரோதமானதுபோல, ஸ்பெயின் மூர் ஜாதியாருக்கு விரோதமானதுபோல, ப்ரான்ஸு ஸ்பெயினுக்கு விரோதமானதுபோல, இங்கிலாந்தும் ஜெர்மனியும் ப்ரான்ஸுக்கு விரோதமானதுபோல, அமெரிக்கா இங்கிலாந்துக்கு விரோதமானதுபோல,—இன்னொன்றுக்கு விரோதமாம்பொழுது தான் ஒன்று சேர்ந்துகொண்டு, ஒரு ஜன சமூகம் இன்னொரு ஜனசமூகத்தைப் பார்க்கிலும் அபிவிருத்தி யடைவதற்குள்ள முக்கிய காரணங்களுள் ஒன்றாயிருக்கிறது.

தற்பிரீதி தன்னலத்தியாகத்துக்கு முதலாவது உபாத்தியாயராகும். தனிப்பட்ட வியஷ்டியினுடைய நன்மையைக் காப்பாற்றுதற்காகவே மனிதன் முதலில் சமஷ்டியினுடைய க்ஷேமத்தைக் கருதுகிறான். ஒருவனுடைய ஜனசமூக நன்மையிலேயே அவனுடைய சொந்த நன்மையும் இருக்கிறது; ஒருவனுடைய ஜனசமூக க்ஷேமத்திலேயே, அவனுடைய சொந்த க்ஷேமமும் இருக்கிறது. அநேகருடைய ஒற்றுமை யில்லாவிட்டால், பெரும்பான்மைக் கார்யங்கள் நடைபெற முடியா,— தற்காப்புக்கூட அசாத்தியமாகிவிடுகிறது. இந்த ஸ்வயநலத்தைக் காப்பாற்றுவதற்காக அந்நியோந்யம் உதவியிலே நண்பர்

களுடைய கைகள் சேர்தல் ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு ஜனசமூகத்திலும் காணப்படுகிறது. இந்த ஸ்வயநலத்தின் சுற்றளவு வெவ்வேறு ஜனங்களிடம் வெவ்வேறுவிதமா யிருக்கிறது என்பது உண்மைதான். ஜனத்தொகையைப் பெருக்கிக்கொண்டு, கைக்கும் வாய்க்கும் சண்டை யென்கிற அபாய வாழ்க்கையை உடைத்தாயிருப்பதற்கு, உயர்ந்த ஜாதியாருடைய மத சம்பந்தமான தொழில்கள் எவ்விதத்திலும் கஷ்டமுறக் கூடாது என்ற நிபந்தனையே இந்தியர்களுக்கு மிகமிகச் சிரேஷ்டமான நன்மையும் லாபமுமாம். தற்கால இந்தியாவுக்கு இதைப்பார்க்கிலும் சிறந்ததெனக் கருதும்படியான நம்பிக்கையில்லை; இந்திய வாழ்க்கையாம் ஏணியின் கடைசிப்படி இதுதான்!

இந்தியாவின் தற்கால அரசாங்கத்திலே சில தீமைகள் இருக்கின்றன; அதிலே நல்ல, சிரேஷ்டமான பாகங்களும்கூட இருக்கின்றன. மிகமிகச் சிரேஷ்டமான நன்மை யாதெனில், இதுதான்; பாடலிபுத்ர சக்ராதிபத்யம் விழுந்ததற்குப் பின் இதுவரையில் இந்தியாவானது பிரிட்டிஷாரைப் போன்ற பூமி முழுதும் செங்கோல் செலுத்தும் சக்தி மிகுந்த அரசாங்க யந்திரத்தின் போக்கிலே யிருந்ததில்லை. இந்த வைசிய ஆதிக்கத்திலே, வைசியனுக்கு இயற்கையாயுள்ள இடைவிடா முயற்சி என்று மிருக்க, வியாபாரப் பொருள்கள் உலகின் ஒரு பாகத்திலிருந்து இன்னொரு பாகத்துக்குக் கொண்டுபோகப் படுதல்போல, அதே சமயத்தில் அதன் இயற்கைப் பலனாக, வெவ்வேறு தேசங்களின் எண்ணங்களும் நினைப்புக்களும்

இந்தியாவின் சதைக்குள்ளும் எலும்புக்குள்ளும் புகுந்து ஸ்திரமாகின்றன. இந்த எண்ணங்களிலும் நினைப்புக்களிலும் சில அதற்கு உண்மையில் மிகமிக நலம் தரத்தக்கவையே; சில தீங்கிழைப்பனவே; வேறு சில, இந்தத் தேசத்து ஜனங்களுக்கு எது உண்மையில் நல்லதென்று தீர்மானிக்க அந்நியர்களுக்கு அறிவு மில்லை, சக்தியு மில்லை யென்பதை நிரூபிக்கின்றன. ஆனால், நன்மையோ, தீமையோ எது உள்ளதோ அந்தக் கூட்டத்தி னிடையே பிளந்துகொண்டு இந்தியாவின் வருங்காலச் செழிப்பின் நிச்சயமான அறிகுறி கிளம்பக் காணப்படுகிறது. ஒரு பக்கத்திலே யுள்ள அதனுடைய பழய தேசீயக் கொள்கைகளுக்கும், மறுபக்கத்திலே யுள்ள அந்ய ஜன சமுகத்தாரின் நூதனமான, புதிதாகப் புகுத்தப்பட்ட கொள்கைகளுக்கும் செய்கையும் எதிர்ச் செய்கையும் ஏற்படவே அதன் பலனாக, அது மெல்ல, சாந்தமாகத் தனது நீண்ட, ஆழ்ந்த நித்திரையினின்றும் விழித்துக்கொண்டுவருகிறது. அது தப்பிதங்கள் செய்யும்,—அது செய்யட்டும்; அதனால் கெடுதல் இல்லை; நமது செய்கைகள் எல்லாவற்றிலும் தப்பிதங்களும் குற்றங்களுமே நமது உபாத்தியாயர்களாகும். எவன் தப்பிதங்கள் செய்கிறானோ அவனாலேயே சத்திய மார்க்கம் அடையப்படுகிறது. மரங்கள் ஒருபொழுதும் தப்பிதங்கள் செய்கிறதில்லை; கற்கள் ஒருபொழுதும் குற்றங்கள் செய்கிறதில்லை. பிரகிருதியின் ஸ்திரமான நியதிகளை மிருகங்கள் மீறினதாகக் காணவே யில்லை; ஆனால், மனிதன் தப்பிதம் செய்பவனே; அவனே பூவுலகில் தெய்வ மாகின்றான். தொட்டிலிலிருந்து சுடுகாடு வரையுமுள்ள நம்முடைய ஒவ்

வொரு சலனமும், காலை யுதயத்திலிருந்து நடுநிசியில் உறங்கப் போகிறவரையிலும் உள்ள நம்முடைய ஒவ்வொரு நினைப்பும் மிகமிக நுட்பமாக விவரிக்கப்பட்டுப், பிறரால் நமக்கு விதிக் கப்படுமானால்,— அந்த விதிக்கப்பட்ட சட்டங்களாம் இரும்புப் பிடிப்புக்குள்ளே நம்மை வைப்பதற்கு அரசனுடைய சக்தி அவசியமாகக் கொண்டுவரப்படுமானால்,— நாமே ஸ்வதந்திரமாக நினைப்பதற்கு நமக்கு எஞ்சியுள்ளது யாது? ஒரு மனிதனை மேதாவியாக, மகரிஷியாகச் செய்வது யாது? அவன் நினைக்கின்றதினா லல்லவா? சிந்திக்கின்றதினா லல்லவா? சங்கற்பித்துக்கொள்கின்றதினா லல்லவா? அப்பியாச மில்லாவிட்டால், ஆழ்ந்த சிந்தனைக்குரிய சக்தி இழக்கப்பட்டுவிடுகிறது; தமோகுணம் வியாபிக்கின்றது; மனம் மந்தமாகி உணர்ச்சியற்று விடுகிறது; ஆத்மா ஜடத்தின் சமத்துவத்துக்குக் கொண்டுவரப்பட்டு விடுகிறது. இப்பொழுதுகூட ஒவ்வொரு மதப் பிரசாரகனும், ஒவ்வொரு சமுதாயத் தலைவனும், சமுதாயம் நன்கு நடைபெறுதற்காகப் புதிய சட்டங்களையும் விதிகளையும் ஏற்படுத்துவதற்குக் கவல்கின்றான். தேசத்திலே போதுமான விதிகள் இல்லையா? விதிக ளில்லாக் குறையினாலே தேசம் தவிக்கின்றதா? விதிகளின் அடக்குமுறையினால், ஜன சமூகம் முழுதும் அழிந்துபோகும்படியான தருணத்திலிருக்கிறது,—இதை யறிந்துகொள்ள எவர் யோசனை செய்கின்றார்?

கேள்விமுறை யற்றுத் தன்னரசு செலுத்தும் அரசனாயிருந்தால், ஜயிக்கப்பட்ட ஜாதி ஆளும் அரசாங்கத்தினாலே அவ்வளவு இழிவாக நடத்தப்படமாட்டார்கள். அத்தகைய

தன்னரசு அரசாங்கத்திலே, எல்லாக் குடிகளுக்கும் சமமான சுதந்திரங்கள் உண்டு; அதாவது, ஆளும் அரசாங்கத்தைக் கேள்வி கேட்க, அல்லது அடக்க எவருக்கும் உரிமை கிடையாது. ஆகையால், ஜாதிக்கும் மற்றும் பிரத்தியேக உரிமைகள் கிடைக்கமாட்டா. ஆனால், தன்னரசு அரசாங்கம் ஆளுகின்ற ஜாதியின் சப்தத்தினாலே அடக்கப்படுகிற இடத்தில், அல்லது ஜயிக்கப்பட்ட ஜாதியாரை ஒரு குடியரசு ஆட்சி ஆள்கிறபொழுது, அங்கே ஆள்கின்றவர்களுக்கும் ஆளப்படுவோருக்கும் இடையில் ஒரு அகன்ற தூரம் உண்டுபண்ணப் பட்டுவிடுகிறது; ஆளப்பட்ட ஜாதிகளின் நன்மைக்கே செலவிடப்பட்டால் வெகு சீக்கிரத்திலே அவர்களுக்குப் பெருத்த நன்மையைச் செய்யக்கூடிய அந்தச் சக்தியின் பெரும் பாகமும் அடங்கிய ஜாதியாரை முழுதும் அடக்கி வைத்துக்கொள்ளுதற்குச் செய்யும் முயற்சிகளிலும் ஏற்பாடுகளிலும் அரசாங்கத்தாரால் வீண் செலவு செய்யப்படுகிறது. ரோமசக்ராதிபத்ய காலத்திலே அதன் அந்நியக் குடிகள் ரோமாபுரி குடியரசின் கீழ் இருந்ததைப்பார்க்கிலும் அதிக சந்தோஷ மநுபவித்தார்கள். இதே காரணத்தை முன்னிட்டுத்தான் கிறிஸ்தவப் பிரசாரகராகிய மகாத்மா பால் ஜயிக்கப்பட்ட யூதஜாதியிலே பிறந்திருந்தபொழுதிலும் தமக்கு விரோதமாகக் கொண்டுவரப் பட்ட குற்றங்களைப்பற்றி விசாரிப்பதற்கு ஸீஸர் என்னும் ரோமசக்கரவர்த்தியினிடத்தில் முறையிட அநுமதி கேட்டார். யாரோ சில தனிப்பட்ட ஆங்கிலேயர்கள் நம்மை "சுதேசி" அல்லது "கறுப்பன்" என்று அழைத்து நாம் நாகரிகமற்ற காட்டு மிராண்டிகள் என்று கூறி நம்மைப் பகைத்

தால், அதனுல் நாம் லாபம் அடைவது மில்லை, நஷ்டமடைவது மில்லை. நாம் ஜாதி வித்தியாசங்களினுலே நமக்குள்ளே ஒருவரிடம் ஒருவர் விரோதப்பான்மையும் நிந்தையும் உடையவர்களா யிருக்கிறோம். பிராஹ்மணர்கள், தங்களுக்கு ஒரு மூட, அநாகரிக, க்ஷத்திரிய அரசன் கிடைத்துவிட்டால் கிருபையுடனே "சூத்திரர்களுடைய நாக்குகளை யறுக்க" மாட்டார்களென்றும், "அவர்களுடைய அவயவங்களைச் சிதைக்க" மாட்டார்களென்றும், எவரால் சொல்ல முடியும்? சமீபத்தில் கிழக்கு ஆர்யாவர்த்தத்திலே வெவ்வேறு ஜாதி ஜனங்கள் தங்களுக்குள்ளே தங்கள் சமுதாய நிலைமையைச் சீர்திருத்திக் கொள்ளும்பொருட்டு ஒற்றுமைப்பட்டதொரு அனுதாப உணர்ச்சியை வளர்ப்பதாகத் தோன்றுவதும்,—மகாராஷ்டிரதேசத்தில் பிராஹ்மணர்கள் மகாராஷ்டிர ஜாதியைப்பற்றி ஸ்தோத்திரப் பாடல்கள் பாட ஆரம்பித்திருப்பதும்,—இவ் விஷயங்கள் பரிசுத்தமான ஸ்வயநலமற்ற தன்மையின் பயன் என்று தாழ்ந்த ஜாதிகளால் இன்னும் நம்பமுடிகிறதில்லை. ஆனுல், மெல்ல மெல்ல, இந்திய சக்ராதிபத்யமானது தங்களுடைய ஆட்சியினின்றும் போய்விட்டால், ஆங்கில ஜனசமுகத்துக்கே அபாயமாய் முடியு மென்றும், அவர்களுடைய அழிவேயாய் விடுமென்றும், ஆங்கிலப் பொது ஜனங்களுடைய மனத்திலே எண்ணம் உண்டாக ஆரம்பித்திருக்கிறது; ஆகையால், எவ்விதத்திலாவது, இந்தியாவிலே இங்கிலாந்தினுடைய ஆதிபத்தியம் காப்பாற்றப்படவேண்டும். ஒவ்வொரு இந்தியனுடைய ஹிருதயத்திலும் பிரிட்டிஷ் ஜன சமுகத்தினுடைய பலம் மிகுந்த கௌரவதையையும் மேன்மையையும் சிறந்தனவாகக்

கொள்ளும்படி செய்தலே இதற்கு வழி யென்று அவர்கள் நினைக்கிறார்கள். இந்தப் பரிகாசகரமானதும் பரிதாபகாமானது மான எண்ணம் ஆங்கிலேயர்களுக்குள்ளே எப்படி ஏற்பட்டு வருகிறதென்பதையும், இந்த எண்ணத்தை யநுஷ்டானத்திலே கொண்டுவருதற்கு அவர்கள் எப்படி யொரே மாதிரி வேலை செய்து வருகிறார்க ளென்பதையும் ஆராய்ந்து பார்த்தால், சிரிப்புக்கும் அழுகைக்கும் ஒரே சமயத்தில் இட முண்டாகின்றது. ஆங்கிலேயர்கள் இந்த இந்திய சக்ராதிபத்தியத்தைச் சம்பாதிப்பதற்கு உடைத்தாயிருந்த அந்தத்தைர்யமும், அந்த விடாமுயற்சியும், காரியத்தில் அந்த அத்தியந்த தேசிய ஒற்றுமையும்,— ஐச்வர்யம் எல்லாவற்றுக்கும் தாயாகிய இந்தியாவையே இங்கிலாந்தினுடைய முக்கிய வியாபார ஸ்தலமாகச் செய்திருப்பதும் சாஸ்திரத்தின் உதவி பெற்றதுமான, என்றும் விழித்துள்ள வியாபார சாமர்த்தியமும்,— இந்த லக்ஷணங்கள் அவர்களின் ஜாதிய வாழ்க்கையினின்றும் அழிக்கப்படாமலிருக்கும்வரையில் இந்தியாவிலே அவர்களுடைய ஸிம்ஹாசனம் அசைக்க முடியாததாயிருக்கும் என்பதை இந்தியாவிலே வசிக்கும் ஆங்கிலேயர்கள் மறந்துகொண்டு வருகிறார்கள் என்று தோன்றுகின்றது. பிரிட்டிஷ் லக்ஷணத்திலே இந்தக் குணங்கள் உள்ளூர அமைந்திருக்கும் வரையில், அத்தகைய இந்திய சக்ராதிபத்யங்கள் ஆயிரக்கணக்காக இழக்கப்பட்டாலும், மறுபடியும் ஆயிரக் கணக்காகச் சம்பாதிக்கப்படும். ஆனால், அந்தக் குணங்களாகிய ஆற்றினுடைய போக்கு தடுக்கப்படுமானல், பிரிட்டிஷ் கௌரவத்தையும் மேன்மையையும் பற்றிப் பிரமாதமாகப் பேசுவதனால் மாத்திரம் ஒரு சக்

ராதிபத்யம் ஆளப்படுமோ? ஆகையால் அத்தகைய சிறந்த குணங்கள் இன்னும் ஆங்கிலேய ஜனசமுகத்தி னிடத்திலே உச்ச ஸ்தானத்தை வகித்திருக்க, அர்த்தமற்ற "கௌரதை" யைக் காப்பாற்றுவதற்கென்று அவ்வளவு சக்தியைச் செலவழித்தல் சற்றும் பயனற்றதாம். குடிஜனங்களுடைய க்ஷேமத்தின்பொருட்டு அந்த சக்தி உபயோகப் படுத்தப்பட்டால், ஆளும் ஜாதியார், ஆளப்படும் ஜாதியார் ஆகிய இருதிறத்தவருக்கும் நிச்சயமாய் அது ஒரு பெருத்த லாபமா யிருந்திருக்கும்.

வெளி ஜனசமுகங்களுடனே இந்தியாவானது உராய்ந்து கொண்டதின் மூலமாக அது மெல்ல விழித்துக்கொண்டு வருகிறது என்று முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. இச் சிறிய விழிப்பின் பலனாகத் தற்கால இந்தியாவிலே ஸ்வதந்திர எண்ணம் ஓரளவு தோன்ற ஆரம்பித்திருக்கிறது. ஒரு பக்கத்திலே தற்கால மேனாட்டு சாஸ்திரமானது லக்ஷக்கணக்கான சூரியர்கள் உதயமானாற்போலக் கண்கள் கூசும்படியான ஒளியுடனே, நேர்குத்தாகப் பாயுந் தன்மையுள்ள பிரத்தியட்ச சக்திகளின் அநுஷ்டானத்தினால் சேர்க்கப்பட்ட உண்மைகளாம் ரதத்தை ஓட்டுகின்றது; மறு பக்கத்திலே, இந்தியாவானது கீர்த்தி பெற்று உச்ச ஸ்தானத்திலேயிருந்த காலத்திலே யிருந்த தனது பூர்வீக முன்னோர்களுடைய நம்பிக்கை நிறைந்த, பலம் அளிக்கவல்ல பரம்பரைச் சாஸ்திரங்கள் இருக்கின்றன. இந்தப் பரம் பரைச் சாஸ்திரங்கள் தனது சொந்த நாட்டிலும் வெளியிலும் பிறந்த மகரிஷிகளி

கிடக்கும் விவாகத்தை நமது சொந்த இஷ்டம்போலத் தீர்மா னித்துக்கொள்வதற்கு நமக்குப் பாத்தியதை யிருக்கவேண் டும்" என்று கூறுகிறது. மறுபக்கத்திலே பழய இந்தியா வானது, "விவாகமானது இந்திரிய போக அநுபவத்துக்கு அன்று, ஆனல் ஜாதியை விருத்திசெய்வதற்கேயாம். இது தான் விவாகத்தைப்பற்றி இந்தியனுடைய கருத்து. குழந்தை களை யுற்பத்தி செய்வதினால், நீ சமுதாயத்தினுடைய வருங் கால நன்மைக்கு, அல்லது தீமைக்கு அநுகூலமாயும் பொறுப் பாளியாயும் ஆய்விடுகிறாய். ஆகையினால், நீ யாரை விவாகம் செய்துகொள்ளலாம்? யாரை விவாகம்செய்துகொள்ளக்கூடாது? என்பதைப்பற்றி ஆக்ஞாபிப்பதற்குச் சமுதாயத்துக்கு ஸ்வ தந்திர முண்டு; எது சமுதாயத்தினுடைய க்ஷேமத்துக்கு அநுகூலமான விவாக மாதிரியோ அந்த மாதிரியே சமுதாயத் தில் வியாபகமா யிருக்கிறது; அநேகருடைய நன்மையின் பொருட்டுத் தனிப்பட்ட சுகம் அநுபவிப்பதற்குள்ள ஆசை யை விட்டுவிடு" என்று கூறுகிறது.

ஒருபக்கத்திலே புதிய இந்தியாவானது "நாம் மேனாட் டுக் கொள்கைகள், மேனாட்டு ஆகாரம், மேனாட்டு உடை, மே னாட்டு நடை யுடை பாவனைகள் இவற்றை யநுசரித்தால் நாம் மேனாட்டு ஜனசமூகங்களைப்போலப் பலமும் சக்தியும் வாய்ந்த வர்களாவோம்" என்று சொல்கிறது; மறுபக்கத்திலே பழய இந் தியாவானது, "ஏ, மூடர்களே! பாவனையினால் மற்றவர்களு டைய கொள்கைகள் ஒருபொழுதும் சொந்தக் கொள்கைகளாய் விடா;—சம்பாதிக்கப்பட்டா லொழிய எதுவும் உனக்குச்

சொந்தமாகாது. கழுதை ஸிம்ஹத்தினுடைய தோலைப் போர்த்துக்கொண்டதினால் ஸிம்ஹ மாய்விடுமோ?" என்று கூறுகிறது.

ஒருபக்கத்திலே புதிய இந்தியாவானது, "மேனாட்டு ஜன சமூகங்கள் செய்கின்றவை நிச்சயமாய் நன்மையானவே; இல்லையேல் அவை எப்படிச் சிறப்படைந்தன?" என்று சொல்கிறது. மறுபக்கத்திலே பழய இந்தியாவானது, "மின்னலின் ஒளி அத்தியந்தம் பிரகாசமா யிருக்கிறது; ஆனால், அது ஒரு நிமிஷத்துக்கே; பையன்களே! பாருங்கள்! அது உங்கள் கண்களைக் கூச்சப்படுத்துகின்றது. ஜாக்கிரதை!" என்று கூறுகிறது.

அப்படியானால், மேனாட்டாரிடமிருந்து நாம் கற்றுக்கொள்ளவேண்டிய தொன்றுமில்லையா? நாம் முயற்சி செய்து, உயர்ந்த விஷயங்களை யடையப் பிரயத்தனம் செய்ய வேண்டாமா ? நாம் பரிபூர்ணர்களா யிருக்கிறோமா? நமது சமுதாயமானது அணுவளவும் அழுக்கற்றதாய்க் குற்றமே யற்றதாய் இருக்கிறதா ?— அறிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள் அநேகம் இருக்கின்றன; நாம் புதியவையும் இன்னும் உயர்ந்தவையுமான பொருள்களை யடைதற்குக் கடுமையாக முயற்சி செய்யவேண்டும்,—கடுமையான முயற்சியே மனுஷ்ய வாழ்க்கையின் பிரயோசனமாம். ஸ்ரீராமகிருஷ்ணர், "நான் எவ்வளவு காலம் உயிர் வாழ்கிறேனோ அவ்வளவு காலமும் கற்றுக்கொள்கிறேன்" என்று கூறுவது வழக்கம். கற்றுக்கொள்வதற்கு ஒன்றுமே யில்லாத மனிதன், அல்லது ஜனசமூகம் மரணவாயில் போய்ச் சேர்ந்துவிடும். ஆம், நாம் அநேக

விஷயங்களை மேனாட்டிலிருந்து கற்றுக்கொள்ள வேண்டும்,—ஆனால், பயமுமிருக்கிறது.

அறிவில்லாத ஒரு வாலிபன் ஸ்ரீராமகிருஷ்ணரின் முன்னிலையில் எப்பொழுதும் ஹிந்து சாஸ்திரங்களைப் பற்றிக் குறை கூறுவது வழக்கம். ஒருநாள் அவன் ஸ்ரீபகவத்கீதையைப் புகழ்ந்தான்; அதன்மேல் ஸ்ரீராமகிருஷ்ணர், "எவரோ ஐரோப்பிய பண்டிதர் கீதையைப் புகழ்ந்திருக்கிறாரென்று நினைக்கிறேன்; ஆகையினால், அவனும் அதைப் பின்தொடர்ந்தான்" என்று சொன்னார்.

ஏ இந்தியாவே! இதுதான் உனக்கு நேரிடவிருக்கும் பயங்கரமான ஆபத்து. எது நன்மை, எது தீமை யென்பதை யுக்தியினாலே, ஆராய்ச்சியினாலே, விவேகத்தினாலே, அல்லது சாஸ்திர மேற்கோள்களினாலே நீ தீர்மானித்துக்கொள்ள முடியாதபடி, மேனாட்டாரைப்போல நடக்கவேண்டுமென்ற மாயை உன்னை அவ்வளவு பலமாகப் பிடித்திருக்கின்றது. வெள்ளையர் எந்தக் கொள்கைகளை, எந்த நடையுடை பாவனைகளை ஸ்தோத்திரம் பண்ணுகிறார்களோ, அல்லது பிரியப்படுகிறார்களோ, அவையே நல்லவையா யிருக்கின்றன; அவர்கள் பிரியப்படாத, அல்லது கண்டிக்கின்ற எந்த விஷயங்களும் தீயனவா யிருக்கின்றன. அந்தோ! இதைவிட மூடத்தனத்துக்கு வேறு அத்தாட்சி யாதிருக்கக்கூடும்?

மேனாட்டு ஸ்திரீகள் எங்கு வேண்டுமானாலும் தாராளமாகச் செல்கிறார்கள்;—ஆகையால், அது நல்லதாம். அவர்கள்

தங்களுக்குத் தாங்களே புருஷர்களைத் தெரிந் தெடுத்துக் கொள்கிறார்கள்;— ஆகையால், அதுதான் அபிவிருத்தியின் உச்ச நிலைமை. மேனாட்டார் நமது உடை, அலங்காரங்கள், ஆகாரம், வாழ்க்கை வழிகள் இவற்றை யொப்புக்கொள்கிறதில்லை;—ஆகையால், அவை கெட்டவையாம். மேனாட்டார் விக்கிர காராதனையைப் பாபகரமானதென்று சொல்லிக் கண்டிக்கிறார்கள்,— அப்படியானால் விக்ராகாராதனை மிகமிகப் பெரிய பாபம் என்பது நிச்சயம்; அதில் சந்தேகமே யில்லை!

ஒரே தேவதையைப் பூஜிப்பதுதான் மிகமிகச் சிறந்த ஆத்ம நன்மைக்குக் காரணமானது என்று மேனாட்டார் கூறுகிறார்கள்;—ஆகையால், நாம் நமது தேவர்களையும் தேவிகளையும் கங்காநதிக்குள்ளே எறிந்துவிடுவோம்! ஜாதி வித்யாசங்கள் அசங்கியமானவையென்று மேனாட்டார் கருதுகிறார்கள்,—ஆகையால், வெவ்வேறு ஜாதிகளெல்லாம் ஒன்றாக்கப்படட்டும்! குழந்தை விவாகமே எல்லாத்தீமைகளுக்கும் வேராகும் என்று மேனாட்டார் கூறுகிறார்கள்;— ஆகையால், அதுவும் மிகக் கெட்டதாம்; நிச்சயமாக அது கெட்டதாம்!

மேனாட்டு ஜனசமுதாயத்தைப்பற்றி இதை எழுதுபவருக்கு ஓரளவு சொந்த அனுபவமுண்டு. அத்தகைய அனுபவத்தின் பயனாக அவருக்கு உண்டாயிருக்கும் முடிபு யாதெனில், ஒவ்வொன்றினுடையவும் ஆரம்பப் போக்கைப்பற்றியும், லக்ஷியத்தைப்பற்றியும், மேனாட்டு ஜன சமுகத்துக்கும் இந்தியா ஜனசமுகத்துக்கும் இடையே அகன்ற வித்தியாசமுள்ள

தென்பதும், இந்தியாவிலேயுள்ள எந்த வகுப்பும் மேனுட்டு மாதிரியைப் பின்பற்றி நடைபெறுமானல்,லக்ஷியத்தை இழந்து விடு மென்பதுமாம். மேனுட்டுச் சமுதாயத்திலே ஒருபொழுதும் வசிக்காமல் ஆகையினல் அங்கே புருஷர்களும் ஸ்திரீகளும் இருக்கக்கூடிய மாதிரியைப்பற்றிய விதிகளையும் நிஷேதங்களையும் சற்றுமே அறியாதவர்களா யுள்ளவர்களிடத்து நமக்கு அணுவளவும் அனுதாபம் கிடையாது; அங்கே பல விதிகளும் நிஷேதங்களும் ஏற்பட்டு,அவை மேனுட்டு ஸ்திரீகளுடைய பரிசுத்தத் தன்மையைக் காப்பதற்கு ரக்ஷைகளாயிருக்கின்றன;— இதை யறியாது, நமது சமுதாயத்திலே புருஷர்களும் ஸ்திரீகளும் தங்குதடையின்றிக் கலந்து கொள்வதற்கு அநுமதி கொடுக்கின்றவர்களிடம் நமக்கு அனுதாபம் கிடையாது.

பலஹீனமான ஜனசமுகங்களில் பிறந்த குழந்தைகளும், இங்கிலாந்திலே பிறந்தால், தாங்கள் கிரேக்கர்கள், போர்த்துக்கேசியர், ஸ்பானியன் என்று உண்மையைச் சொல்லிக்கொள்வதற்குப் பதிலாக ஆங்கிலேயர்கள் என்று சொல்லிக்கொள்வதை நான் மேனுட்டிலும் கண்டிருக்கிறேன். எல்லாம் பலவானை நோக்கியே செல்கின்றன;— மேன்மை யுள்ளவர்களிடம் பிரகாசிக்கின்ற மேன்மையின் ஒளி தனது சரீரத்தின்மீது எப்படியாவது விழுந்து பிரதிபலிக்கலாமென்றே, அதாவது, பெரியோரின் ஒளியில் இரவல் வாங்கிப் பிரகாசிப்பதே பலஹீனர்களுடைய ஒரு இச்சையா யிருக்கின்றது. இந்தியர்கள் ஐரோப்பியர்களுடைய உடையுடுத்துக் கொள்வதைப் பார்க்

கும்பொழுது,— ஒருவேளை அவர்கள் தங்கள் ஜனசமுகத்தைச் சொல்லிக் கொள்ளவும் இந்தியாதேசத்து அறிவீனர்களான, எளிய, எழுதப் படிக்கத் தெரியாத, கீழே போட்டு மிதிக்கப்படும் ஜனங்களைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளவும் வெட்கப்படுகிறார்களோ என்ற நினைப்பு என் மனத்தில் உண்டாகிறது! சென்ற பதினான்கு நூற்றாண்டுகளாக ஹிந்துவினுடைய ரத்தத்தினால் போஷிக்கப்பட்ட வளர்ந்த பார்ஸி "சுதேசி"யா யில்லை! பிராஹ்மணர்களென்று சொல்லிக் கொண்டு தங்களைத் தாங்களே மேன்மைப்படுத்திக்கொள்கின்ற ஜாதியற்றவர்களுடைய அகங்காரத்தின்முன்னே, பழய காலத்துத் தீரர்களான உயர்ந்த ஜாதிப் பிராஹ்மணர்களின் உண்மைச்சிறப்பு ஒன்றுமில்லாமற் போய்விடுகிறது! இன்னும், இந்தியா தேசத்திலே யுள்ள அந்த மூடர்களான, அறிவீனர்களான, லக்ஷக்கணக்காக வுள்ள தாழ்ந்த ஜாதியார், அரையில் மாத்திரம் துணியுடுத்துக்கொண்டிருப்பவர்கள், ஆர்யர்களல்லாதவர்கள் என்று இப்பொழுது மேனாட்டார் நமக்குக் கற்றுக்கொடுத்துவிட்டார்கள்! ஆகையால், அவர்கள் நம்மைச் சேர்ந்தவர்களே யல்லர்.

ஏ இந்தியாவே ! பிறர் செய்யும் இந்த நிந்தனையை வைத்துக்கொண்டு, பிறரைப் பின்பற்றும் இந்தக் கிழிந்த பாவனையை வைத்துக்கொண்டு, பிறர்மீது இப்படிச் சார்ந்திருத்தலை வைத்துக்கொண்டு, அடிமைக்குரிய இந்தப் பலஹீனத்தை வைத்துக் கொண்டு, இந்த இழிந்த, அருவருக்கத்தக்க கொடூரத்தை வைத்துக்கொண்டு,—நீ இந்தச் சாமக்கிரியைகளை மாத்திரம்

னவத்துக்கொண்டு, நாகரிகத்தினுடையவும் பெருமையினுடையவும் மிகமிக உயர்ந்த சிகரத்துக்கு ஏறிச் செல்ல முடியுமா? உனது அவமானகரமான கோழைத்தனத்தை உபாயமாகக் கொண்டு தீரர்களுக்கும் வீரர்களுக்குமே உரித்தாய ஸ்வதந்திரத்தை நீ அடைய முடியுமா? ஏ, இந்தியாவே! உனது ஸ்திரீத் தன்மையின் லக்ஷியம் ஸீதை, ஸாவித்ரி, தமயந்தி யென்பதை— மறைந்துவிடாதே; நீ பூஜிக்கின்ற கடவுள் தபஸ்விகளுக்குள் மகா தபஸ்வி யென்பதை, சர்வசங்க பரித்யாக சங்கரன் என்பதை, உமாபதி யென்பதை,—மறந்துவிடாதே. உனது விவாகம், உனது ஐச்வர்யம், உனது வாழ்க்கை இவை இந்திரிய சுக போகத்துக்காக அல்லவென்பதை— மறந்துவிடாதே. நீ மாதாவினுடைய பீடத்தில் இடப்படுதற்கு ஒரு பலியாகப் பிறந்திருக்கிறு யென்பதை,— மறந்துவிடாதே. உனது சமுதாய அமைப்பு அகண்டமான ஜகன்மாதாவினுடைய லக்ஷணத்தின் பிரதிபலனமே யென்பதை,—நீமறந்துவிடாதே; தாழ்ந்த வகுப்பினர், அறிவீனர்கள், எளியவர்கள், எழுதப் படிக்கத் தெரியாதவர்கள், சக்கிலியன், தோட்டி, இவர்கள் உனது சதையும் இரத்தமுமே யென்பதை, உனது சகோதரர்களே யென்பதை,—மறந்து விடாதே. ஏ, தீரா! தைர்யமாயிரு! துணிந்துகொள்; நீ ஒரு இந்தியனு யிருப்பதுபற்றிக் கர்வமடை,—“நான் ஒரு இந்தியன்,—ஒவ்வொரு இந்தியனும் என்னுடைய சகோதரன்” என்று கர்வத்துடனே பறையறை. “அறிவீனனுன இந்தியன், எளிய உதவியற்ற இந்தியன், பிராஹ்மண இந்தியன், பறைய இந்தியன் எனது சகோதரனே” என்று சொல்லு! துடுப்பைச் சுற்றிக் கந்தையே தரித்திருக்

கும் நீயும் உனது உச்சக் குரலில்,—“இந்தியன் எனது சகோதரன், இந்தியன் எனது ஜீவிதம், இந்தியாவின் தேவர்களும் தேவிகளும் எனது கடவுள், இந்தியாவின் சமுதாயமே எனது குழந்தைப்பருவத்துத் தொட்டில்,எனது பால்ய பருவத்து உத்யானவனம், பரிசுத்த க்ஷேத்திரம், எனது விருத்தாப்பிய வயதுக்குக் காசிமாநகரம்'' என்று கர்வத்துடனே கூறு. சகோதர!—“இந்தியாவின் பூமியே எனக்கு மிகமிக உத்கிருஷ்டமான மோக்ஷலோகம், இந்தியாவின் நன்மையே எனது நன்மை” என்று சொல்லு! இரவும் பகலும்,—ஏ, கௌரி நாத! ஏ,ஜகன்மாதா!எனக்கு ஆண்மையை அளிப்பாய்'ஏ,சக்திமாதா! எனது பலஹீனத்தை யெடுத்துவிடு! எனது ஆண்மையற்றதனத்தை எடுத்துவிடு! என்னை ஒரு ஆண்மகன் ஆக்கு” என்று திரும்பத் திரும்ப ஜபம்செய்து, பிரார்த்தனை செய்.

தற்கால இந்தியா

முற்றுப்பெற்றது.



PRINTED AT THE GANESA PRESS
VEPERY, MADRAS. 1922